# முற்றம்

இதழ் 1 – வைகாசி 2013   Issue 1 - May 2013   www.muttram.ca   info@muttram.ca   Phone: +1.647.872.0796

## வணக்கம்!

நீண்ட நாள்க் கனவென்று நிறைவேறிய திருப்தி எங்களுக்கு. ஒரு பத்திரிகை வழியாக எமது உறவுகளைச் சந்திக்கும் எமது எண்ணம் இந்த முதல் இதழில் சாத்தியமாகியிருக்கிறது.

எத்தனையோ பத்திரிகைகள் வெளிவந்துகொண்டிருக்கும் கனடியத் தமிழ்ச் சூழலில் இன்னொரு பத்திரிகையின் வரவு உங்களிற் பலரது புருவங்களை உயர்த்தலாம். இதன் தேவை என்ன எனும் கேள்விகூட உங்களிற் பலருக்கு எழக்கூடும். எந்தப் பூங்காவும் நிறைவுற்ற பூங்கா என எவரும் கூறிவிட இயலாது. தமிழகத்துக்கும் இலங்கைக்கும் வெளியே மிக அதிகமாக தமிழர்கள் செறிவாய் வாழும் நகரொன்றில் எத்தனை பத்திரிகைகள் வெளிவந்தாலும், அவை தமது தனித்துவம் காரணமாய் அவற்றுக்குரிய இடத்தைப் பெறும் என்பதில் ஐயமில்லை. தமிழைப் பேசவும், கேட்கவும் முடிகிற சூழலில் தமிழைப் படிக்கவும் ஒரு சிறு வாய்ப்பாய்ப் பத்திரிகைகள் உலா வருகின்றன. மொழியின் பிரயோகத்தை மேலும் பரவலாக்குவதிற் பத்திரிகைகள் பெரும்பணி ஆற்றுகின்றன.

தாய்நாட்டினை விட்டுப் பிரிந்த அனைவருக்கும் ஒரு வீடு பற்றிய கனவு தொடர்ந்து கொண்டே இருக்கும். வீடு என்பது எமது வாழ்வில் முற்றத்தோடே இணைந்து இருப்பது. முற்றம் இன்றி வீடு இல்லை. வீடு இன்றி வாழ்வும் இல்லை. எல்லோரது கனவினதும் தொடர்ச்சியாகவே இந்த முற்றம் உங்கள் கைகளில்.

வணிக நோக்கம் இல்லாத ஒரு பத்திரிகை என்று எம்மைப் பற்றி பொய்யுரைக்க நாம் விரும்பவில்லை. ஒரு பத்திரிகையின் தயாரிப்பு, விநியோகம் என்பவற்றுக்காக விளம்பரங்களை நம்பியிருக்க வேண்டிய நிலையே எமதும். வணிகத்தை மாத்திரம் முதன்மைப் படுத்தாது மனித உறவுகள் கூடி மகிழும் ஓர் இடமாகவே இந்த முற்றம் இருக்க விழைகிறது.

உலகெங்கும் பரந்து வாழும் எமது உறவுகள் வந்து சந்திக்கும் ஒரு மையமாக இருக்க முற்றம் முனைகிறது. இதுவே எமது முதன்மையான விருப்பமாயினும், இதன் சாத்தியங்களையும், வெற்றிகளையும் காலம் மாத்திரமே தெளிவுறுத்தும். உலகப் பந்தின் எந்த மூலையில் இருந்தாலும் எமது உறவுகள் அறுந்துவிடாதிருக்க ஒருவரை ஒருவர் அறிதல் அவசியம். அந்த அறிதலுக்கான களமாக இருக்க முற்றம் விழைகிறது.

புலம்பெயர்ந்துவிட்டதால் எமது அடையாளம் சிதைவுறாமல் இருக்க முற்றம் ஒரு சிறு துணையாய் இருக்கும் என நம்புகிறோம். முற்றம் எங்களது என்று சொல்வதைக் காட்டிலும், உங்கள் அனைவருக்குமானது என்பதே சாலப் பொருத்தமானது. எமது பலங்கள், பலவீனங்கள் - குறைகள், நிறைகள் என எதனையும் எம்மிடம் கூறுங்கள். இதனை ஒரு கூட்டுப் பயணமாக்க உங்கள் அனைவரது ஒத்துழைப்பும் அவசியமானது.

இது முற்றத்தின் முதற் காலடி. அடுத்து வரும் காலடிகள் அழுத்தமாய் பதிய நீங்கள் தரும் ஆதரவு உதவுமென நம்புகின்றோம். இந்த இதழைவிட அடுத்தடுத்த இதழ்களை மேலும் செழுமையாய் உங்களிடம் வரும் என நாங்கள் நம்புகிறோம். உங்கள் எல்லாவிதமான பங்களிப்பையும் அன்போடு வேண்டி விடைபெறுகிறோம். மீண்டும் உங்கள் கைகளிற் தவழும் விருப்போடு...

முற்றம்

வைகாசி 2013.

## முற்றத்தில்

கருணாகரன், கிளிநொச்சி
உமாசுதன், திருகோணமலை
கனக மகேந்திரா, கீரிமலை
ரிஷானா ஷெரீப், கொழும்பு
கலையரசன் , நெதர்லாந்து
கருணாகரமூர்த்தி, ஜேர்மனி
விஜயேந்திரன், நோர்வே
விக்கி, அவுஸ்திரேலியா
சிவா, ஐக்கிய அமெரிக்கா
சீதா, மொன்றியல்
பொ.கனகசபாபதி, ரொறன்ரோ
நந்தினி, ரொறன்ரோ
கலாராஜன், ரொறன்ரோ
கபிலன், றிச்மண்ட் ஹில்
மதுரன், வாட்டர்லு
சதா, ஸ்கார்பரோ

**Fashion Florist** Inc. (Babu) நிறுவனத்தின் ஆதரவில்

ஈழத்து நடனக் கலைஞன்
பிறேம்கோபாலின் நெறியாள்கையில் பல கனடிய இளம் கலைஞர்கள் கலந்து சிறப்பிக்கும் நடன நிகழ்ச்சி




416-265-9100
416-265-8884

Tickets:
$ 20, VIP & VVIP

MAY
30
7.00 PM

பிறேம் கோபாலின்

# வலி சுமந்த மண்

Chinese Cultural Centre
5183 Sheppard Ave E Toronto, ON M1B 5Z5,
Scarborough, ON



பின் வரும் இடங்களில் நுழைவு சீட்டுக்களை பெற்றுக்கொள்ளலாம்

ERAA CD Market
S.P Importers
Markham Video Centre
New Spiceland Super Market
Columbia Video
Vijaya's Silk Inc

## ஹோஸ்னி முபாரக்

எகிப்து முன்னாள் அதிபர் ஹோஸ்னி முபாரக்கிற்கு எதிரான வழக்கின் மறுவிசாரணை மே மாதம் முதல் வாரத்தில் தொடங்கியது. 2011இல் எகிப்து அதிபராக இருந்த முபாரக்கின் ஆட்சியை எதிர்த்து மக்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டவர்களில் 850 பேர் இராணுவத்தின் கடும் நடவடிக்கைகளில் உயிரிழந்தனர். தொடர்ந்து, எகிப்தில் ஆட்சி மாற்றம் ஏற்பட்டது. பின்னர் முபாரக் மீது வழக்குகள் தொடரப்பட்டு நடத்தப்பட்ட வழக்கில் முபாரக் குற்றவாளி என்று சிறப்பு நீதிமன்றம் கடந்த 2012ஆம் ஆண்டு தீர்ப்பளித்தது. இதை எதிர்த்தும்,



இந்த வழக்கில் மறுவிசாரணை நடத்தக் கோரியும் முபாரக், கெய்ரோ நீதிமன்றத்தில் மனுத்தாக்கல் செய்தார். அவரது கோரிக்கையை நீதிமன்றம் ஏற்றுக் கொண்டது. அதன்படி, மறுவிசாரணை கடந்த மாதமே தொடங்கியிருக்க வேண்டும். எனினும், இவ்வழக்கை விசாரிக்க வேண்டிய நீதிபதி முஸ்தபா ஹசன் அப்துல்லா அதை கெய்ரோ மேல் முறையீட்டு நீதிமன்றத்துக்கு மாற்றினார். இதையடுத்து, மேல்முறையீட்டு நீதிமன்றத்தில் முபாரக்கிற்கு எதிரான வழக்கின் மறுவிசாரணை, நீதிபதி மஹ்மூத் கமல் எல்-ரஷீதி முன்னிலையில் சனிக்கிழமை தொடங்கியது. இந்த விசாரணைக்காக, உடல்நலம் குன்றியுள்ள முபாரக் ஸ்டிரெட்சரில் படுத்தபடி நீதிமன்றத்தில் ஆஜரானார். இவ்வழக்கில் குற்றம் சாட்டப்பட்டுள்ள முபாரக்கின் இரு மகன்களான கமாலா, ஆலா ஆகியோரும், முன்னாள் உள்துறை அமைச்சர் ஹபீப் எல்-அட்லி, ஆறு உதவியாளர்கள் ஆகியோரும் நீதிமன்றத்தில் ஆஜராகினர். இந்த வழக்கு விசாரணை ஜூன் 8ஆம் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டது.

## தமிழ் அகதிகள் கைது

இலங்கை அரசு, தமிழ் அகதிகள் 66 பேரை பயங்கரவாதிகள் விசாரணைப் பிரிவிடம் ஒப்படைத்துள்ளது. தமிழகத்தில் இருந்து, இந்தியாவைச் சேர்ந்த படகு ஒன்றில், அவுஸ்திரேலியாவுக்கு செல்ல முயன்ற இவர்கள் கடந்த 6-ம் தேதி நடுக்கடலில் இலங்கை கடற்படையினரால் கைது செய்யப்பட்டனர். இதில் 41 ஆண்கள், 13 பெண்கள், 6 சிறுவர்கள், 6 சிறுமிகள் அடங்குவர். இவர்களில் முன்னாள் விடுதலைப்புலிகள் யாரும் உள்ளார்களா? அவுஸ்திரேலியா தப்பிச் சென்று அங்கு பதுங்கியிருக்கும் தங்கள் இயக்கத்தினரை சந்திக்கும் திட்டம் இருந்ததா? என்பது குறித்து விசாரணை நடைபெறும் என்று தெரிவிக்கப்பட்டுள்ளது என இலங்கையிலிருந்து வெளியாகும் ஜலண்ட் பத்திரிகை தெரிவித்தது. இதற்கிடையில் போலி இந்திய கடவுச் சீட்டுகளுடன் ஜேர்மனிக்கு புறப்படவிருந்த சிலர் தமிழகத்தில் கைது செய்யப்பட்டதாகத் தெரியவருகிறது.

## தொழிற்சாலை அனர்த்தம்

வங்கதேச தொழிற்சாலைக் கட்டடம் இடிந்து விழுந்து ஏற்பட்ட விபத்தில் பலியானோர் எண்ணிக்கை 1000 இற்கும் மேல் உயர்ந்தது. விபத்து ஏற்பட்டு மூன்று வாரங்கள் ஆன நிலையில், மேலும் பல உடல்கள்



இடிபாடுகளில் இருந்து மீட்கப்பட்டன. சிலர் உயிருடனும் மீட்கப்படுவதால் மீட்புப்பணி தொடர்கிறது. கடந்த ஏப்ரல் 24ம் தேதி ரானா பிளாஸா காம்ப்ளக்ஸில் 3000 ஆயிரத்துக்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் இரவுப் பணியில் இருந்தபோது, கட்டடம் திடீரென இடிந்து விழுந்தது. கனடாவின் லொப்லோஸ், பிரிட்டனின் பிரிமார்க், ஸ்பெய்னின் மாங்கோ, இத்தாலியின் பெனிற்றன் உள்ளிட்ட மேற்கத்திய நாடுகளின் நிறுவனங்களுக்காக இந்த நிறுவனம் ஆடைகளைத் தயாரித்து ஏற்றுமதி செய்து வந்தது.

வங்காள தேசத்தின் தொழிற்சாலைகளில் பல பல விபத்துகள் ஏற்படுவதுடன் மாதச்சம்பளமாக $40.00 இற்கு குறைவாகவே வழங்கப்படுவதும் குறிப்பிடத்தக்கது. அண்மையில் ஏற்பட்ட தீ விபத்துகள் இத் தொழிற்சாலைகளில் பாதுகாப்பு ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டிய அவசியத்தை வலியுறுத்தி நிற்கின்றன.

சர்வதேச கொள்வனவாளர்களை திருப்திப்படுத்தவும், தொழில்துறை தரங்களை மேம்படுத்தவுமாக மேற்கொள்ளப்படும் பாதுகாப்பை உத்தரவாதப்படுத்தும் நடவடிக்கையின் ஒரு பகுதியாக ஏற்கனவே வங்கதேச அதிகாரிகள் 18 தொழிற்சாலைகளை மூடிவிட்டார்கள்.

## சீன வானொலி - சென்னையில் பண்பலை தமிழ்ச் சேவை

சீன அரசு வானொலியின் சர்வதேச தமிழ்ச் சேவை சென்னையில் தனது பண்பலை (F.M) வானொலி நிலையத்தை விரைவில் தொடங்க உள்ளது. C.R.I எனப்படும் சீன வானொலியின் சர்வதேச தமிழ்ச் சேவைப் பிரிவு கடந்த 1963ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. சாவோ ஜியாங் தலைமையில் செயல்படும் இப்பிரிவில் மரியா மைக்கேல், புஷ்பா ரமணி ஆகிய இரு இந்தியர்கள் உள்பட 18 உறுப்பினர்கள் உள்ளனர். தமிழ் தவிர, பெங்காலி, உருது, ஹிந்தி ஆகிய மூன்று இந்திய மொழிகளிலும் C.R.I தனது ஒலிபரப்புச் சேவைகளை வழங்கி வருகிறது. இந்நிலையில், சீன வானொலியின் சர்வதேச தமிழ்ச் சேவைப் பிரிவு தனது 50ஆவது ஆண்டு விழாவை முன்னிட்டு, இந்தியாவில் பண்பலை வானொலி நிலையத்தை விரைவில் தொடங்க உள்ளதாக இப்பிரிவின் துணை இயக்குநரான வாணி என்ற காய் ஜூன் தெரிவித்தார். அவர் மேலும் கூறுகையில், "நாங்கள் ஏற்கெனவே தமிழ்நாட்டில் சிற்றலை வரிசை மூலம் நிகழ்ச்சிகளை ஒலிபரப்பி வருகிறோம். இப்போது சென்னையில் உள்ள சில பண்பலை (F.M) வானொலி நிலையங்களுடன் பேச்சுவார்த்தை நடத்தி வருகிறோம். இதன் மூலம் அங்கு பண்பலைத் துறையில் நாங்கள் அடியெடுத்து வைக்கிறோம்" என்றார். இந்நிலையில், சீனா வந்துள்ள வெளிநாட்டுச் செய்தியாளர்களிடம் சி.ஆர்.ஐ.யின் தெற்காசிய மையத்தின் இயக்குநர் லூ ஹாங்பிங் பேசினார். அவர் கூறுகையில், "இந்தியாவுடன் தகவல்தொடர்பு வசதியை மேம்படுத்துவதற்காக மொபைல் ரேடியோவை அறிமுகம் செய்வது குறித்து நாங்கள் பரிசீலித்து வருகிறோம். புதிய முறைகளை அறிமுகம் செய்ய நாங்கள் முயற்சிக்கிறோம். வானொலி நிகழ்ச்சிகள், செய்திகள் ஆகியவற்றைப் பகிர்ந்து கொள்வதில் நாங்கள் ஆர்வமாக இருக்கிறோம்" என்றார். கடந்த 1941இல் தொடங்கப்பட்ட சீன வானொலி இப்போது உலகின் 63 மொழிகளில் சேவைகளை வழங்கி வருகிறது.

## சாதனை படைத்த இந்திய வம்சாவளி இளைஞர்

இந்திய வம்சாவளியைச் சேர்ந்த ரிதங்கர் தாஸ், கலிபோர்னியா பல்கலைக்கழகத்தில் பட்டப்படிப்பில் முதல் இடத்தில் தேர்ச்சி பெற்று சாதனை படைத்துள்ளார். கொல்கத்தாவைப் பூர்வீமாகக் கொண்ட 18 வயது இளைஞரான இவர், கலிபோர்னியா பல்கலைக்கழகத்தில் கடந்த நூறாண்டுகளில் இச்சாதனையை



நிகழ்த்திய இளவயது பட்டதாரி என்பது குறிப்பிடத்தக்கது. பயோ-பொறியியல் (BIO ENGINEERING), இரசாயன உயிரியல் (CHEMICAL BIOLOGY) ஆகிய இரு பட்டப்படிப்புகளை இவர் மூன்று ஆண்டுகளில் முடித்துள்ளார். இரசாயனத் துறையில் கடந்த 58 ஆண்டுகளில் இச்சாதனை புரியும் முதல் மாணவர் இவர். பயோ என்ஜியனிரிங் துறையில் சாதனை புரியும் முதல் மாணவராக இவர் திகழ்கிறார். தனது 13-வது வயதில் ரிதங்கர் விஸ்கான்சின் பல்கலைக்கழகத்தில் ஆய்வுப் படிப்பில் சேர்ந்தார். அதன்பின்பு எரிசக்தி தொடர்பான ஆய்வுகளில் அவர் கவனம் செலுத்தினார்.அதே போல் சிறந்த கவிஞராகவும், எழுத்தாளராகவும் ரிதங்கர் தாஸ் திகழ்கிறார். இதுதொடர்பாக ரிதங்கர் தாஸ் கூறியது: எனது சாதனையை பெற்றோர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் அர்ப்பணிக்கிறேன். அவர்கள் இல்லையென்றால் இச்சாதனையை செய்திருக்க முடியாது என்றார். பட்டப்படிப்புக்கு பின்பு ஆக்ஸ்போர்ட் பல்கலைக்கழகத்தில் முதுகலை பயோமெடிக்கல் என்ஜியரிங் பிரிவில் சேர்ந்து படிப்பை தொடர உள்ளார்.

## தமிழினப் படுகொலை நினைவு தினம்- மே 18

உலகின் பல்வேறு பாகங்களிலும் நினைவுகூரப்படும், முள்ளிவாய்க்கால் தமிழினப் படுகொலை நினைவு தினம் - மே 18, 2013 அன்று ரொறன்ரோவில் மூன்று இடங்களில் இடம்பெறுகிறது.

தமிழ் மக்களுடன், அபிமானிகளும் , ஆதரவாளர்களும் பெருமளவில் கலந்து கொள்ளுவார்கள் என எதிர்பார்க்கப்படுகிறது.





## உங்களுக்குத் தெரியுமா?

### மிக நீளமான தெரு

உலகத்திலேயே மிக நீளமான தெரு ரொறன்ரோ மாநகரில் உள்ள யங் வீதி ஆகும் ஆகும். இவ்வீதியின் மொத்த நீளம் 1896 கிலோ மீற்றர் (1178 மைல்)! ரொறன்ரோ, கனடாவின் ஒன்ராரியோ மாநிலத்தின் தலை நகரம். இங்கு தான் தென்கிழக்கு ஆசியாவுக்கு வெளியே ஆகக் கூடுதலான தமிழர்கள் வசிக்கிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இயற்கை எழில் கொஞ்சும் ஒன்ராரியோவிலேயே உலகப் புகழ் பெற்ற நயாகரா நீர்வீழ்ச்சி , CN கோபுரம் ஆகியவையும் அமைந்துள்ளன.

### றிங் .....றிங் .....றிங் ..... ஹலோ

உலகின் முதலாவது செல்லிடத் தொலைபேசி 1946ம் ஆண்டில் வாகனங்களில் பாவனைக்கு விடப்பட்டது. இது பெல் நிறுவனத்தால் அமெரிக்காவின் மிசோரி மாநிலத்தில் உள்ள செயின்ட் லூயிஸ் நகரில் அறிமுகப்படுத்தப்பட்டது.

கையில் எடுத்துச் செல்லக்கூடிய முதலாவது செல்லிடத் தொலைபேசி அழைப்பு 1973ம் ஆண்டு ஏப்ரல் மூன்றாம் திகதி மோட்டோரோலா நிறுவனத்தின் மார்ட்டின் கூப்பரினால் பெல் ஆய்வுகூடத்தை சேர்ந்த ஜோல் ஏஞ்சல் இற்கு மேற்கொள்ளப்பட்டது. இந்தத் தொலைபேசியின் எடை இரண்டு இறாத்தல்கள் ஆகும். அதன் அறிமுக விலை $3995.00 என்பதும் குறிப்பிடத்தக்கது.

# பவுண்

பவுணுக்கு வேட்டையையும் வெள்ளாமையையும் தவிர, வேறு எதுவுமே தெரியாது. இந்த நாற்பத்தியாறு வயசில் அவன் வேறு எதையும் பழகவேயில்லை. அதுக்கு அவசியமும் இருக்கேல்லை. வெள்ளாமை செய்யிறதுக்கு அப்புவின் காணிகள் இருந்தன. தண்ணீருற்றில் மூன்று போகமும் விளையும் வயல். கற்பூரப்புல் வெளியில் ஒரு இரண்டு ஏக்கர் நிலம். குமுழமுனையில் அம்மாவழி உரித்தான வெட்டைக்காட்டு வயல். அதில் ஆண்டுக்கு ஒரு போகம்தான் விளைவிக்கலாம். என்றாலும் ஏக்கருக்கு இருபது மூடை அடிக்கும். அங்கே அவனுக்கான நிலமும் ஒரு ஏக்கருக்குக் கொஞ்சம் கூடுதலாகத்தான் இருந்தது. போதாதென்று பிறகு அவனும் ஒட்டுசுட்டானுக்கு அருகே கருவேலங்கண்டல் பக்கமாக அவன் கூட்டாளிகளுடன் ஒரு நாலு ஏக்கர் அளவில் காடு வெட்டிப் புலவாக்கியிருந்தான். பவுண் பெரிய கமக்காரன் இல்லைத்தான். ஆனால், ஒரு ஏழு எட்டு ஏக்கர் விதைப்பான். சில காலம் நிலைமையை, வசதியைப் பொறுத்து, ஆற்றையும் காணிகள் வசதியாக அமைஞ்சால் இன்னுமொரு இரண்டோ மூன்று கூடுதலாக விதைப்பான். அதுக்கு மேல அவன் ஆசைப்படுவது கிடையாது. வயல் விதைப்பைத் தவிர பவுணுக்குப் பிடித்தமான தொழில் அல்லது பொழுது போக்கு வேட்டை. ஆறு ஏழு வயதிலேயே பழகிய தொழில் அது. அதில் அவன் பக்காக் கெட்டிக்காரனாகவும் இருந்தான். பவுணின் வீட்டில் காட்டிறைச்சி இருக்காத நாட்களே இல்லை. வெள்ளி, செவ்வாய் எல்லாம் அவனுக்குக் கிடையாது. ஆனால், பொங்கல், திருவிழாக்காலங்களில் அவன் துவக்கே தூக்கமாட்டான். அவனிடம் பெல்ஜியம் 304 – 10 ஆம் நம்பர் சொட்கண் இருந்தது. அது அவனுடைய விருப்பங்களை எல்லாம் நிறைவேற்றியது. ஊருக்குள் அவனுக்கென்றொரு பேரையும் பெற்றுக் கொடுத்திருந்தது. இவ்வளவும் போதும் அவனுக்கு. உலகத்தின் பெருங்கோடீஸ்வரர்களில் ஒருவராக தான் வரவேணுமென்று ஒரு போதும் எண்ணியதுமில்லை. விரும்பியதுமில்லை. வற்றாப்பளை அம்மன் கோவில் பொங்கலுக்கு, காட்டா விநாயகர் கோவில், ஒட்டுசுட்டான் சிவன் கோவில், தண்ணீருற்றுப் பிள்ளையார் கோவில், முள்ளியவளைக் கல்யாண வேலவர் கோவில் திருவிழாக்களுக்கு செலவழிக்கக் காசிருக்க வேணும். குமுழமுனையிலோ முள்ளியவளையிலோ வற்றாப்பளையிலோ ஆண்டு தோறும் ஆடுகின்ற கூத்துகளுக்கு என்று கொடுக்கவும் செலவழிக்கவும் கூடிய மாதிரியும் இருக்கோணும். ஊருக்குள்ளும் சொந்த பந்தங்களுக்குள்ளும் வருகிற நன்மை தீமைகளுக்குப் போகக் கூடியமாதிரியும் கொடுத்து மாறக்கூடிய மாதிரியும் கையில ஏதாவது இருக்க வேணும். இதைத்தவிர, பிள்ளைகளுக்கும் மனுசிக்கும் உடுப்பிடவைகள். கழுத்திலையோ கையிலையோ போடக்கூடிய அளவுக்கு நகை. அவர்களின் விருப்பம் எப்படியோ ஆண்டுக்கு ஆண்டு வேறுபட்டுக் கொண்டே இருக்கும். அதுவும் பொங்கல், திருவிழாக்காலங்களில்தான் இந்த விருப்பமும் தெரிவுகளும் இன்னும் கூடும்.



சாப்பாட்டுக்குக் குறைவில்லை. வீட்டில் நெல் தாராளமாக இருக்கும். பாலுக்கும் தயிருக்குமாக மாடுகள் நின்றன. வயல் வேலைக்கு முதலில் மாடுகளையும் வண்டிலையும் வைத்திருந்தான். பிறகு அவனுக்கு அவை தோதாக இல்லை என்று கொஞ்சக் காலம் அதையெல்லாம் விற்றுப் போட்டு, பெத்தப்பாவின் மெசினை (உழவு இயந்திரத்தைப்) பிடிச்சு வயல் வேலைகளைச் செய்தான். ஆனால், வன்னியில் போர் பெருத்து, எண்ணை, தண்ணி எல்லாத்தையும் அரசாங்கம் தடுக்கத் தொடங்கியபோது மீண்டும் பட்டிமாடுகளையே பழக்கினான். அவனுக்கு எப்போது நிலாக்காலம் என்று தெரியும். எப்ப அமாவாசை, அட்டமி, நவமி எல்லாம் வரும் என்றும் அவனுக்குத் தெரியும். பனிக்காலம் தெரியும். மழையையும் வெயிலையும் அவனுடைய உடம்பு நல்லாகவே அறியும். காட்டுப் பூக்களின் வாசம் அவனுக்கு அத்துபடி. இன்ன போகத்துக்கு இன்ன வாசனை. இந்தப் போகத்தில் இந்த மரங்கள் பழுக்கும். இந்தக் காலத்தில் இன்ன பறவைகள்தான் சிறகடிக்கும். காட்டிலும் வயலிலும் இருக்கும் மண்ணின் இதமும் தகிப்பும் தண்மையும் எல்லாம் அவனறிந்தவை. போர் வந்தபோதும் அவன் சுதந்திரமாகவே இருந்தான். இந்தியன் ஆமிக்காலத்தில் கொஞ்சம் கூடுதலாகக் கஸ்ரப்பட்டதைத் தவிர பிறகெல்லாம் அந்தளவுக்கு கஸ்ரங்கள் இருக்கவில்லை. ஆனால், போர்க் காலத்தில் கடுமையாக உழைக்க வேண்டியிருந்தது. எல்லாமே விலை. பொருட்கள் உள்ளுக்குள் வருவது தடைப்பட்டால் விலை ஏறுமல்லவா. அதனால், அதற்காக கடுமையாக உழைக்க வேணும். அப்படி உழைத்தால்தான் சமாளிக்கலாம். பவுண் இரவு பகல் என்று பாராமல் உழைத்தான். ஊரோடு ஒத்து, இயக்கத்துக்கும் உதவினான். பிறகு அவனுடைய மூத்த பிள்ளையும் இயக்கத்துக்கே போனான். அது பவுணுக்கு முதலில் கொஞ்சம் கவலையாகவே இருந்தது. மூத்தபிள்ளை அவனுக்கு உதவியாக இருக்கும் என்று அதிகம் நம்பியிருந்தவன். இப்பிடித் திடீரென்று போராடப் போய்விட்டால் அவன் எப்படி அதைத் தாங்கிக் கொள்ள முடியும். ஏற்கனவே பவுணின் தம்பி ஒருத்தன் இயக்கத்துக்குப் போய், இந்தியன் ஆமிக்காலத்தில காலில காயப்பட்டு செத்தவன். அதை விட மனிசியின்ர தங்கைச்சி ஒருத்தி இயக்கத்திலையே இருக்கும் போது தன்னுடைய மகனும் போயிருக்கிறான் என்று அவனுக்குக் கவலையாகவே இருந்தது.

சில குடும்பத்தில ஆருமே இயக்கத்தில இல்லாமல் எப்பிடியோ சுழிச்சுக் கொண்டு தங்கட காரியத்தைப் பாத்துக் கொண்டு போறாங்கள். இயக்கத்தோடையும் அவங்கள் பரவாயில்லாமல்தான் இருக்கிறாங்கள். வெளியில வவுனியாவுக்கோ கொழும்புக்கோ கூட அவங்களாலைதான் சுகமாகப் போய் வரக்கூடியதாக இருக்கு. ஆனால், பவுண் வவுனியாவுக்குப் போகவே பல சந்தர்ப்பங்களில தயங்கினான். ஏன் சும்மா தேவையில்லாத வம்பென்று அவன் ஆரையும் தனக்குத் தோதான ஆக்களைப் பாத்து வவுனியாவுக்கு அனுப்பினான். இல்லை என்றால், அங்க போய் வாற ஆக்களிட்ட சாமானுக்குச் சொல்லி விட்டான். வயல்க்காணி சில காலங்களில் கொஞ்சம் சறுக்கினாலும் அவனை ஒரேயடியாய்க் கைவிட்டதில்லை. எப்படியோ சமாளித்துக் கொள்ளக் கூடிய அளவுக்கு ஒண்டில்லை எண்டால் இன்னொண்டு எண்டமாதிரி மாடுகள், வேட்டை, வயல் என்று இருந்தன. ஆனால், பவுண் தன்ரை இந்த வயதுக் காலத்தில் ஆடிப்போனது 2007, 2008 க் காலப்பகுதியில்தான். சண்டை முற்றி அது தொண்டையை இறுக்கியது. அவனால் எதுவுமே செய்ய முடியவில்லை. அவன் மட்டுமா அப்படித் தவித்தான்? அங்கேயிருந்த எல்லாருந்தான் தவித்தார்கள்.

பவுணுக்கு எல்லாமாக ஆறு பிள்ளைகள். இயக்கத்துக்குப் போனவனைத் தவிர இன்னும் ஐந்து பிள்ளைகள் அவனோடிருந்தன. அதை விட மனிசி, அவனுடைய அம்மா, மனைவியின் தாயார் என்று மொத்தமாக ஒன்பது பேர். போர்க்காலத்தில் அளவுக்கதிகமான எல்லாமே சுமைதான். இந்தச் சுமையைக் குறைப்பதாகவோ அல்லது இன்னும் அவனுக்குச் சுமையைக் கூட்டுவதாகவோ இரண்டாவது பிள்ளையையும் (பெண்) போருக்கு என்று சேர்த்துக் கொண்டார்கள். போர் முற்றி, விரிந்து கொண்டிருந்தது. சனங்கள் ஒவ்வொரு இடங்களிலிருந்தும் இடம் பெயர்ந்து கொண்டேயிருந்தார்கள். அவனுடைய குமுழமுனை வயல் பறிபோனது. பிறகு கருவேலங்கண்டல் புலவு. அவர்கள் முள்ளியவளையில் இருந்து வெளியேறினார்கள். அதுவொரு வெள்ளிக் கிழமை. பொறுத்துப் பொறுத்துப் பார்த்து இனி முடியாது என்ற நிலையில் அன்று காலை வீட்டை விட்டுக் கிளம்பினார்கள். வெள்ளிக் கிழமையில் வீட்டைவிட்டு, ஊரை விட்டுப் போகக் கூடாது என்று பவுணின் அம்மா சொல்லிக் கவலைப் பட்டுக் கொண்டே வெளியேறினா. அவனுக்கு அப்படிக் கிளம்புவது என்ன விருப்பமா? அல்லது அந்த ஊர்ச்சனங்களுக்குத்தான் அது விருப்பமா? அங்கே இருக்க முடியாதென்றால் வேறு என்னதான் செய்ய முடியும்? வற்றாப்பளை அம்மனைக் கும்பிட்டுக் கொண்டு, காட்டா விநாயகரை, தண்ணீரூற்றுப் பிள்ளையாரை எல்லாம் நினைத்துக் கொண்டு அவர்கள் வெளியேறினார்கள். கேப்பாப்பிலவுப் பக்கமாகப் போய் புதுக்குடியிருப்பைச் சேர்ந்தார்கள். வீட்டில் ஏராளம் பொருட்கள் விடப்பட்டிருந்தன. சாப்பாட்டுக்குத் தேவை என்று நெல், இன்னும்

## கருணாகரன் - கிளிநொச்சி

முக்கியமான பொருட்கள், உடுபிடவைகள் என்று அத்தியாவசியமானவற்றை மட்டும்தான் பவுண் எடுத்துக் கொண்டான். எல்லாப் பொருட்களையும் ஏற்றிக் கொண்டு போய் ஆற்றையும் வீட்டை வைக்கேலாது. அதையெல்லாம் அங்கையும் வைக்கேலாமல், வீட்டிலையும் வைக்காமல் போற வாற இடமெல்லாம் தொலைக்க முடியாதென்று விட்டான். ஆனால், வேறு கனபேர், வாகனங்களில் லோர்ட் லோர்ட்டாகச் சாமான்களை ஏற்றிப் பறித்தார்கள். அப்படிப் பொருட்களைக் கொண்டு போனவர்கள் அதையெல்லாம் கொண்டு போன இடங்களில் வைக்க முடியாமல் தவித்ததைப் பவுண் கண்டான். சிலர் இந்தச் சாமான்களை ஏற்றவும் பாதுகாக்கவும் என்று போயே செல் விழுந்து செத்திருக்கிறார்கள். பவுண் புதுக்குடியிருப்பிலிருந்த போது ஏதோ அவனையே தேடிக் கொண்டு வருவதைப் போல ஓட்டுசுட்டான், கேப்பாப்பிலவுப் பக்கங்களால் படையினர் வந்தார்கள். அவன் அங்கிருந்து சனங்களோடு சனமாக குடும்பத்தோடு உடையார் கட்டுக்குப் போனார். அங்கே போய் ஒரு கிழமை இருந்திருப்பார்கள். அங்கே முதலில் செல் வந்தது. ஒண்டல்ல, இரண்டல்ல. ஓராயிரம் இரண்டாயிரமல்ல. மழைத்துளியை எண்ண முடியுமா? இரத்த வெள்ளமும் ஓலக்குரலும் பவுண் குடும்பத்தை மட்டுமா அலைக்கழித்தது. தேடித்தேடி மரணப்பொறிக்குள்ளேயா வந்திருக்கிறோம் என்று அவன் யோசித்தான். அப்படி அப்போது அங்கே நின்று ஆறுதலாக யோசிக்கத் தான் முடியுமா என்பதைப் போல சனங்கள் தாறு மாறாக ஓடினார்கள். ஒருவருக்கும் எங்கே போவதென்று வழிகள் தெரியவில்லை. எல்லா வழிகளிலும் மரணமே சிரித்துக் கொண்டிருப்பதாகப் பவுணுக்குப் பட்டது. ஆனால், அதற்காக இப்படி, இந்த மழைக்குள் நிற்க முடியுமா? அவன் குடும்பத்தோடு ஓடத் தொடங்கினான். அது மரண ஓட்டம். நிற்கவே முடியாத ஓட்டம். தன்னோடிருக்கும் பிள்ளைகளைப் பற்றிய கவலை. போர்க்களத்தில்நிற்கும்பிள்ளைகளைப் பற்றிய கவலை. வயதான காலத்தில் போகிற இடங்களில் சமாளிக்க முடியாமல் திணறுகிற தாயைப் பற்றிய கவலை. கையிலிருக்கும் காசு கரைந்து, இன்னும் இப்படி எத்தனை நாளைக்குச் சாமாளிக்க முடியும் என்ற கவலை. இனி எங்கே போவதென்று தெரியாத கவலை. முதலில் தெரிந்தவர்களின் வீடுகளுக்குப் போனார்கள். பிறகு, பிறகு யாரும் யாரையும் தேடிப்போக முடியாது. அப்படிப் போயும் எந்தப் பிரயோசனமும் இல்லை. எங்கும் சனம் நிறைந்து விட்டது. எங்கே இருந்தாலும் எல்லாமும் ஒன்றுதான். ஒரு பிளாஸ்ரிக் தறப்பாளுக்கு மாறிய வாழ்க்கையில், வள்ளிபுரம், தேவிபுரம், இரணைப்பாலை (திரும்பவும் புதுக்குடியிருப்புக்கு அண்மையில் என்ற விசித்திர நிலை), மாத்தளன், பொக்கணை, வலைப்பாடு, இரட்டை வாய்க்கால், முள்ளிவாய்க்கால் என்று எல்லாத்தையும் கண்டு, களைத்து விட்டான் பவுண். இடையில் அவனுடைய இரண்டாவது பிள்ளை போர்க்களத்தில் இறந்து விட்டதாகச் சொன்னார்கள். கடைசியாக அவர்களின் முன்னிலையில் முள்ளியவளையில், அவர்கள் வீட்டில் அந்தப் பிள்ளை அழுது குழறியபடி போனகாட்சி பவுணை அலைக்கழித்தது. அவனுடைய மனிசி பைத்தியக்காரி போலாகி விட்டாள். மூத்தமகனை அவர்கள் காணவேயில்லை. அங்கே நிற்கிறான், இங்கே நிற்கிறான் என்ற மாதிரிச்சொன்னார்கள். கடைசியாக அவனைப் பவுண், தேவிபுரத்தில் கண்டிருந்தான். அதற்குப் பிறகு தகவலே இல்லை. ஆனால், அவன் பவுணுக்குத் தெரிந்த ஆரோ ஒருவரிடம் தன்னைப் பார்க்காமல் எங்காவது தப்பிப் போகச் சொல்லி அனுப்பியிருந்தான். அவன் சொன்னதைப் போல அங்கிருந்து எங்காவது தப்பிப் போகத்தான் வேணும். ஆனால், பெத்த பிள்ளையை விட்டுவிட்டு அப்படித் தப்பிப் போகமுடியுமா? அங்கிருந்து தப்பவில்லை என்றால் மிச்சம் மிகுதியாக இருக்கிற ஆக்களையும் இழக்கவேண்டி வரலாம். இதற்குள் பவுணுடைய மாமியார் வயிற்றுப் போக்கால் துவண்டு விட்டா. கடைசியில் அந்த மனுசி, வலைப்பாட்டுக் கடற்கரையில் புதைக்கப்பட்டது. இரண்டு வேளைச் சாப்பாடு ஒரு வேளை ஆகியது. உடுப்புகள் மண்மூடைகளுக்காக மாற்றப்பட்டன. பவுண் பைத்தியக்காரர்களில் ஒருவனாகினான். போக்கிடமும் வழியுமில்லாத லட்சக்கணக்கான சனங்களில் அவன் எம்மாத்திரம்? அவனுடைய மைத்துனி இறந்து போனதாகச் சொன்னார்கள். சாவுச் செய்திகள் எந்தப் பாதிப்பையும் எவருக்கும் பெரிதாக ஏற்படுத்த முடியாத நிலை. ஆனாலும் துக்கத்தைக் கட்டுப்படுத்த முடியுமா? இழப்பின் வலியை மனதால் ஒரு போதும் புறக்கணிக்க முடியாதல்லவா. பவுண் முள்ளிவாய்க்காலினால் வெளியேறியபோது.... அவனுடைய இன்னொரு பிள்ளைக்கு இரண்டு கைகளையும் செல் தின்றது. காயப்பட்ட பிள்ளையோடு வவுனியா, அனுராதபுரம், பொலநறுவை என்று அலைந்தான். முள்ளிவாய்க்காலிலிருந்து வெளியேறியபோது அவனுக்கு ஒரு சுமை குறைந்திருந்தது. ஆனால், இன்னும் பல சுமைகள் கூடின. இப்போது அவன் அகதிமுகாம்களில் இருந்து வவுனியாவிலிருந்த சொந்தக்காரர் வீடுகளுக்கு மாறி, பிறகு அங்கேயிருந்து கனகராயன் குளத்துக்கு வந்திருக்கிறான். கனகராயன்குளத்தில் அவனுடைய அண்ணாவின் காணி இருக்கு. அங்கே பதிந்து வந்திருக்கிறான். வவுனியாவிலிருந்து கொண்டு அவனால் எதுவும் செய்ய முடியாது. வேறு தொழில்களும் அவனுக்குத் தெரியாது. வேறு தொழில்களைச் செய்யக் கூடிய நிலையில் வசதிகளும் இல்லை. கனகராயன் குளத்தில் வயல் விதைக்கலாம். வேட்டைக்குப் போக முடியாது. துவக்கில்லை.



மட்டுமல்ல படையினர் அனுமதிக்கவும் மாட்டார்கள். அது விண்வம்பாகியும் விடும். பன்றி வந்து முன்னால் நின்று விளையாடுது. அவனைப் பொறுத்தவரை இப்போது இரண்டு ஏக்கர் வயல் விதைத்தாலே போதும். அதனால், கனகராயன் குளத்துக்கு வந்திருக்கிறான். அவனுடைய சொந்த வீட்டுக்குப் போவதற்கு இப்போதைக்குப் படையினர் அனுமதிப்பார்கள் போல் தெரியவில்லை. கனகராயன் குளத்தில் 12 கூரைத்தகடுகள் கொடுக்கப்பட்டுள்ளன. அதற்குத் தோதாக வீட்டை அமைத்துக் கொள்ள வேண்டியதுதான். போதாதென்றால் இரண்டு தறப்பாள்களும் கொடுக்கப்பட்டுள்ளன. ஒன்றை நிலத்துக்கு விரித்துக் கொள்ளலாம். இன்னொன்றை கூரையாக்கிக் கொள்ளலாம். முள்ளிவாய்க்காலில் விட்டு வர மனமேயில்லாமல் இருந்த மகன் இப்போது ஓமந்தைத் தடுப்பு முகாமில் இருக்கிறான். பவுணின் குடும்பம் மாதத்துக்கு இரண்டு தடவை அவனைப் போய்ப்பார்க்கிறது. கெதியா விட்டிடுவாங்கள் போலக் கிடக்கு என்று ஒவ்வொரு முறையும் அவன் பவுணுக்கும் தாய்க்கும் சொல்லுவான். ஆனால், ஓமந்தையிலிருந்த சிலரை இப்பொழுது பூஸாவுக்கும் கொண்டு போயிருக்கிறார்கள். இந்தச் செய்தி பவுணுக்கு நெஞ்சிலடித்தது. தன்னுடைய மகனையும் பூஸாவுக்குத்தான் கொண்டு போவார்களோ! என்று. இதற்கிடையில் போனகிழமை அவனுக்குத் தெரிந்த ஒருவர், வவுனியாவில் அவனையும் அவனுடைய இரண்டு கைகளும் இல்லாத பிள்ளையையும் கண்டபோது சொன்னார், இந்த மாதிரிப் பாதிக்கப்பட்ட பிள்ளைகளுக்கு தன்னுடைய நண்பர் ஒருவர் உதவிசெய்கிறார். ஆனால், நீங்கள் இந்தப் பிள்ளையின்ர பெயரில ஒரு வங்கிக் கணக்கைத் திறக்க வேணும்" என. அதுக்காக அந்தப் பிள்ளையைக் கூட்டிக் கொண்டு பவுண் வங்கிக்குப் போயிருக்கிறான். 18 வயதான பிள்ளையின் பெயரில் கணக்கைத் திறக்கும் போது அந்தப் பிள்ளையின் கையொப்பம் வேண்டும். அப்போதுதான் வந்தது பிரச்சினை. கையெழுத்திடுவதற்கு அந்தப் பிள்ளையிடம் கைகளில்லை. விரல் அடையாளத்தை வைப்பதற்கு விரல்களுமில்லை. வங்கி மனேஜருக்கு எதுவுமே விளங்கவில்லை. அதைக் கண்டு ஊழியர்கள் திகைத்துப் போய் ஒரு கணம் நின்றனர். அந்தப் பிள்ளை 'என்ன நினைத்தாளோ தெரியாது எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்தாள். பவுண் குலுங்கிக் குலுங்கி அழுதான்.

# ஓர் இரும்புப்பெண்மணியின் இருண்ட காலம்!

ஆணாதிக்க கலாச்சாரம் நிலவும் பிரிட்டிஷ் அரசியலில், ஒரு பெண் பிரதமராக வருவது, நினைத்துப் பார்க்க முடியாதது. அதுவும் பழமை வாதம் பேணும் வலதுசாரிக் கட்சியான கன்சர்வேட்டிவ் கட்சியில், யாரும் எதிர்பார்க்கமாட்டார்கள். மார்க்கரெட்டின் தந்தையார் சிறுவணிகராக இருந்தாலும் மெதடிஸ்ட் பாதிரியாராகவும் கடமையாற்றினார். மார்க்கரெட் சிறுமியாக வாழ்ந்த காலத்தில், அவரது வீட்டில் சுடுநீர் வசதி கிடையாது. மலசலகூடம் வீட்டுக்கு வெளியே அமைந்திருந்தது. அவ்வாறான எளிமையான குடும்பப் பின்னணியில் இருந்து வந்தவர்தான், பிரதமரானதும் நாட்டில் ஏழைகளின் எண்ணிக்கையை கூட்டினார். தொழிலகங்களை மூடி, பலரை வேலையில்லாதவர் ஆக்கினார்.

மார்க்கரெட் முதன் முதலாக தேர்தலில் போட்டியிட்ட தொகுதி, லண்டன் மாநகரின் ஒரு வட்டாரமான பிஞ்ச்லி (Finchley) ஆகும். வடலண்டனில் உள்ள, பணக்காரர்கள் வாழும் தேர்தல் தொகுதி அது. முதலாம் உலகத்தையும், மூன்றாம் உலகத்தையும் ஒரேநாளில் பார்க்க விரும்பினால், அதற்கு லண்டன் மாநகரம் அருமையான இடம். ஒரு காலத்தில் பாட்டாளி மக்களின் சேரிப்பகுதிகளாக இருந்த ஈஸ்ட்ஹும், டேட்டிங் பகுதிகளில்தான், இன்றைக்கு பெருமளவு இந்தியர்களும், இலங்கையர்களும் வாழ்கிறார்கள். அந்த நகர்ப் பகுதிகளுக்கும், பிஞ்ச்லி பகுதிக்கும் இடையில், மலைக்கும் மடுவுக்கும் இடையிலான வித்தியாசத்தை இன்றைக்கும் நேரில் பார்க்கலாம்.

"தாட்சரிசம்" என்ற நவ- தாராள வாததாக்குதல்கள் பிரிட்டிஷ் மக்கள் மேல் நடத்தப்படுவதற்கு முன்னர், பிரிட்டனின் நிலைமை எவ்வாறு இருந்தது? வலதுசாரிக் கருத்தாளர்களைக் கேட்டால், "சாதாரண மக்களுக்கும் நியாயமாகப்படும்" உதாரணம் ஒன்றைக் கூறுவார்கள். "ஒரு வீடு வாங்குவதற்கு மோர்ட்கேஜ் கடன் கிடைப்பது குதிரைக் கொம்பாக இருந்த காலத்தை" பற்றிக்கூறி அங்கலாய்ப்பார்கள். ஆமாம், மார்கரெட் தாட்சர் பிரதமரானதும் வீட்டுக்கடன் கிடைப்பதை இலகுவாக்கினார். ஆனால், அதுவே 2007 ஆண்டு பொருளாதார நெருக்கடி ஏற்படக்காரணமாக இருந்தது என்பதை மறந்துவிடலாமா? லண்டனில் வசிக்கும் எனது நண்பர் ஒருவர், மாதம் ஆயிரம் பவுன்கள் மோர்ட்கேஜ் கட்டிவந்தார். இத்தனைக்கும் அவரது மாதவருமானம், எண்ணூறு பவுன்கள் தான். அவருக்கு எப்படி வீட்டுக் கடன் கொடுத்தார்கள்? அதுதான் "தாட்சரிசம்"! "முதலாளித்துவ அதிசயம்". அதாவது பங்குச் சந்தையில, ரியல் எஸ்டேட் நிறுவனங்களின் பங்குகளின் மதிப்பை ஏற்றுவதற்காக, வங்கிகள் தகுதியில்லாதவர்களுக்கும் கடன் கொடுத்தன. அதன் விளைவுதான், அண்மைய பொருளாதார நெருக்கடி. அதற்கான அத்திவாரம், தாச்சரின் காலத்திலேயே எழுப்பப்பட்டு விட்டது.

அன்றைய காலங்களில், மக்களுக்கு சொந்தவீடு இல்லாவிட்டாலும், அரசு மானியம் வழங்கும் மலிவான வாடகைவீடுகள் கிடைத்துவந்தன. மக்களுக்கு அத்தியாவசியமான துறைகள் தேசிய மயமாக்கப்பட்டதால், மக்களுக்கு பணிப்பாதுகாப்பு இருந்தது. எந்தப் பிரச்சினை என்றாலும் அரசும், பணக்காரர்களுக்கும் ஏழைகளுக்கும் இடையிலான இடைவெளி அதிகரித்தது. ஒரு பக்கம்பணக்காரர்கள் அதிகரித்தனர். மறுபக்கம் ஏழைகள் அதிகரித்தனர்.

பிரிட்டனின் தொழிற்புரட்சிக்கு உந்துசக்தியாக இருந்த நிலக்கரிச் சுரங்கங்கள், தாட்சரின் காலத்தில் இழுத்து மூடப்பட்டன. இதனால் அவற்றை நம்பி வாழ்ந்து கொண்டிருந்த ஆயிரக்கணக்கான சுரங்கத் தொழிலாளர்கள் வேலையிழக்கவும், அவர்களது குடும்பங்கள் பட்டினி கிடக்கவும் வேண்டிய நிலைமை ஏற்பட்டது. எந்தவித பேச்சு வார்த்தைக்கும் இடம் கொடுத்து பழக்கமில்லாத மார்க்கிரட் தாச்சர், போலிஸ் படையை அனுப்பி சுரங்கத் தொழிலாளர்களின் போராட்டத்தை நசுக்க முயற்சித்தார்.

பிரிட்டனில் நடந்த தொழிலாளர் போராட்ட செய்திகளை அறிவித்துக் கொண்டிருந்த சோவியத் யூனியனின் TAS செய்தி நிறுவனம், மார்கரெட் தாட்சருக்கு "இரும்புப்பெண்மணி" என்ற பட்டப் பெயரை சூட்டியது.




தொழிற் சங்கமும் பேச வேண்டும் என்ற சட்டம் இருந்ததால், தொழிலாளர்களின் உரிமைகள் மதிக்கப்பட்டு வந்தன. தாட்சர் பிரதமரானதும், அந்த சட்டத்தை இரத்து செய்தார். அரச நிறுவனங்களை தனியார் மயமாக்கினார். இதனால் மேட்டுக் குடியினரும், முதலாளிகளும் இலாபமடைந்தனர்.

போராட்டம் நீண்ட காலம் இழுத்துச் சென்றதால் களைப்படைந்த, அல்லது குடும்பத்தினரின் வறுமை காரணமாக, குறிப்பிட்டளவு தொழிலாளர்கள் வேலைக்கு திரும்ப சம்மதித்தனர். ஒற்றுமையாக போராடிய தொழிலாளர்கள் இடையே, பிளவு தோன்றியது. இதனால், வேலை நிறுத்தப் போராட்டம் தோற்கடிக்கப்பட்டது. ஆயினும், இலட்சக் கணக்கான தொழிலாளர்கள் வேலை இழப்பதை யாராலும் தடுக்க முடியவில்லை. அன்று நடந்த பிரச்சினைகள், வேலையிழந்த தொழிலாளர்களின் பிள்ளைகளையும் பாதித்தது. அந்த தலைமுறையை சேர்ந்தவர்கள்தான், மார்கரெட் தாட்சரின் மரணத்தை குதூகலத்துடன் கொண்டினார்கள். பிரிட்டனில் வர்க்கப் போராட்டம், இன்றைக்கும் உயிர்ப்புடன் இருப்பதை, . இந்த நிகழ்வுகள் எடுத்துக் காட்டுகின்றன.

**கலையரசன்**
**நெதர்லாந்து**

ஐ.நா. சபை உருவாக்கப்பட்ட பொழுது, அதன் பிரதானமான கோஷமாக, "முழுமையான காலனிய விடுதலை" இருந்தது. ஆனால், இன்றைக்கும் முன்னாள் காலனியாதிக்க நாடுகள், உலகம் முழுவதும் சிறு சிறு தீவுகளை காலனிகளாக வைத்திருக்கின்றன. ஆர்ஜன்தீனாவுக்கு அருகில் உள்ள போல்க்லாந்து தீவுகள் இன்றைக்கும் ஒரு பிரிட்டிஷ் காலனி தான். பூகோள அடிப்படையில், அந்த தீவு தனக்கே சொந்தம் என்று ஆர்ஜெந்தீனா உரிமை கோரியது. அதிரடியாக வந்திறங்கிய ஆர்ஜென்தீன படைகள், போல்க்லாந்து தீவுகளை ஆக்கிரமித்தன. ஆர்ஜன்தீனாவுக்கும், பிரிட்டனுக்கும் இடையில் மூண்ட போரானது, மார்கரெட் தாட்சரின் புகழை உயர்த்த பயன்பட்டது. ஆர்ஜன்தீனாவை விட பலமடங்கு ஆயுதபலம் கொண்ட பிரிட்டிஷ் படைகள், போல்க்லாந்து தீவுகளை மீண்டும் கைப்பற்றின. பிரிட்டனில் தாட்சர் வெற்றிவிழா கொண்டாடினார். ஆங்கிலேய மக்களின் மனதில், பிரிட்டிஷ் பேரினவாதத்தை விதைப்பதற்கு, அந்த வெற்றி விழா பயன்பட்டது.

தாட்சரைப் பொறுத்த வரையில், எல்லாவற்றையும் "நன்மைக்கும், தீமைக்கும் இடையிலான போராட்டமாக" கருதினார். அவரது பேச்சுகளில் தொனித்த, "நாங்கள், அவர்கள்" என்ற சொல்லாடல்கள் உலகை இரண்டாகப் பிரித்தன. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கு, உள்நாட்டிலும், வெளிநாடுகளிலும் எதிரிகள் இருந்தார்கள். உள்நாட்டில் வட அயர்லாந்து விடுதலைப் போராட்டம் தீவிரமடைந்தது. IRA யின் பல வெற்றிகரமான தாக்குதல்கள், தாட்சர் காலத்தில் தான் இடம் பெற்றன. தென்னாபிரிக்க நிறவெறி அரசுக்கு எதிராக போராடிய, கறுப்பின மக்களின் தலைவர் நெல்சன் மண்டேலா, தாட்சரின் கண்களுக்கு "பயங்கரவாதியாக" தோன்றினார். இலங்கையில் அப்போது தான் தோன்றியிருந்த ஈழப் போராட்டத்தையும், "மார்க்சியப்" புலிகளையும் அடக்குவதற்கு, சிங்கள பேரினவாத அரசுக்கு உறு துணையாக நின்றார்.



கட்டவை!



ஒன்றுமே தெரியாத மாணவனிடம் கேள்விப் பேப்பரை கொடுக்கிறார்கள்!

எல்லாம் தெரிந்த ஆசிரியரிடம் ஆன்சர் பேப்பரை கொடுக்கிறார்கள்! என்ன கொடுமை இது!

# அரசியல் உதைபந்தாக மாறியிருக்கும்.. அகதிகள் விவகாரம்!

தமிழ் அகதிகள் கனடாவிலிருந்தும் இங்கிலாந்திலிருந்தும் இலங்கைக்குத் திருப்பி அனுப்பப்படுதல் குறித்த பரபரப்பான செய்திகள் உலகச் செய்திகளில் அவ்வப்போது அடிபடுகையில், சந்தடி அதிகம் இல்லாத உலகின் கீழ் மூலையில் அகதிகள் விவகாரம் இறுக்கமடைய ஆரம்பித்திருக்கிறது. அகதிகளையும் புகலிடக் கோரிக்கையாளர்களையும் கையாள்வதில் அகதிகளுக்கான உரிமைகள் மற்றும் மனிதாபிமானம் போன்றவற்றைத் தாண்டி அவுஸ்திரேலியாவில் வெளிப்படும் வாக்குப்பெட்டி அரசியல் அகதிகளுக்கான செயற்பாட்டாளர்களை மிகுந்த விசனத்துக்கு உள்ளாக்கியிருக்கிறது.

பாதுகாப்பும் அமைதியான வாழ்வும் தேடி ஆயிரம் ஆயிரமாய் அகிலமெங்கும் புலம்பெயர்ந்த ஈழத் தமிழர்களின் இடர்நிறைந்த பயணங்கள் சென்ற தசாப்தத்தின் ஆரம்பத்தில் ஒரு தேக்கம் கண்டன. இருப்பினும் இரண்டாயிரத்து எட்டில் மீண்டும் தொடங்கிய போர் தமிழர்களைக் கடல் பயணத்துக்குப் பொருத்தமற்ற படகுகளில் பாதுகாப்பற்ற நெடும்பயணங்களை மேற்கொள்ள நிர்ப்பந்தித்தது. அமைதியான வாழ்வுக்காக மலேசியா மற்றும் இந்தோனேசியா போன்ற நாடுகளில் காத்திருந்த தமிழர்கள் மட்டுமன்றி, இலங்கையிலிருந்தும் இந்தியாவிலிருந்தும் தமிழர்கள் நிரம்பிய படகுகள் புறப்பட்டன.



முழு வீச்சிலான போர் முடிந்த பின்னர் அவுஸ்திரேலியாவுக்கு வந்த முதலாவது படகு மலேசியாவிலிருந்து புறப்பட்டு ஜூன் 2009இல் வந்தடைந்திருந்தது. நூற்றுத் தொண்ணூற்று மூன்று புகலிடக் கோரிக்கையாளர்களுடன் கிறிஸ்மஸ் தீவை அடைந்த இப்படகைத் தொடர்ந்து, மேலும் இரு மலேசியப் படகுகள் ஜூலை ஓகஸ்ற் மாதங்களில் வந்து சேர்ந்தன.

மலேசியப் படகுகள் போலன்றி இலங்கை - இந்தியப் படகுகள் மிகுந்த சிரமங்களுக்கு மத்தியிலேயே பயணம் செய்திருந்தன. உள்ளூர் பொலிஸ் தாண்டி கடற்படையின் பாதுகாப்பு வளையங்களையும் ஊடறுத்து வருவது முதலாவது சவால். முறைமையான படகோட்டிகள் மற்றும் உருப்படியான படகு இயந்திரங்கள் மட்டுமன்றி, பயணத்துக்குத் தேவையான போதிய அளவு எரிபொருள், உணவு குடிநீர் காலைக்கடன் வசதிகள் என்று எதுவும் இல்லாது இப்படகுகள் புறப்பட்டிருந்தன. இந்தப் பழைய மீன்பிடிப் படகுகள் இந்துசமுத்திரத்துக்கு முகம் கொடுக்கும் வல்லமை அற்றவையாகவும் காணப்பட்டன. புறப்பட்ட படகுகளில் அவுஸ்திரேலியக் கடற்பகுதிக்குள் வர முன்னர் பழுதடைந்து நின்றவையும் புதைந்தவையும் பல. மொத்தத்தில், அவுஸ்திரேலியா வந்து சேர்வது என்பது ஒரு புது உயிர் பெற்றுக்கொண்டதை போலத் தான்.

தமிழர்கள் சில நூறுகளாக வந்துகொண்டிருக்கையில் - ஆப்கானிஸ்தான், ஈரான், ஈராக், பர்மா எனப் பல நாடுகளிலிருந்து ஆயிரக்கணக்கில் புகலிடக் கோரிக்கையாளர்கள் வந்துகொண்டிருந்தார்கள். படகுகள் அடுத்தடுத்து அவுஸ்திரேலியாவின் கடற்பரப்புக்குள் வந்து சேர்வதை அரசுக்கு எதிரான ஒரு பிரசாரமாக மாற்றுவதற்கு எதிர்க்கட்சி (லிபரல் - நாஷனல் கூட்டணி) முனைந்தது. தாம் ஜோன் ஹவாட் (John Howard) தலைமையில் ஆட்சியில் இருந்த போது கடுமையான எல்லைக் காவல் நடவடிக்கைகளை எடுத்திருந்ததாகவும் ஆனால் லேபர் அரசு அவுஸ்திரேலியாவின் பாதுகாப்பு குறித்து மெத்தனமாக இருப்பதாகவும் அவர்கள் குரல் எழுப்பினார்கள்.

வருபவர்கள் பலர் முஸ்லிம் பின்னணியைக் கொண்டவர்கள் என்பதையும் அடையாளம் ஏதும் இன்றி வரும் இவர்களால் அவுஸ்திரேலியாவின் பாதுகாப்பு பாதிக்கப்படலாம் என்றும் இப்பிரசாரங்கள் சூசகமாகச் சுட்டிக்காட்டின. அரசு புகலிட விண்ணப்பங்களைக் கடுமையாகப் பரிசீலிக்காமையால் உண்மையான அகதிகளை விட பொருளாதார நலம் கருதி பெரும்பணம் கொடுத்து வரும் பொய் அகதிகளே அதிகம் என்று வலதுசாரி விமர்சகர்களும் வாதித்தார்கள். அரசாங்கத்துக்கு இவ்வாறு வந்து கொண்டிருந்த அழுத்தம் ஆட்களைக் கடத்தும் முகவர்களுக்கு பாதைகள் மூடப்பட முன்னர் மேலும் பலரை அவசரமாக படகுகளில் ஏற்றி அனுப்புவதை உந்துவதாகப் பத்திரிகைகள் குறிப்பிட்டன. எந்த நாடுகளிலிருந்து வருகிறார்கள் - இவர்களுக்கு இருக்கும் பிரச்சனைகளின் உரப்பு என்ன என்று பார்க்காது - எல்லோரும் ஒரே தலைப்பின் கீழ் "முறையற்ற விதத்தில் வரும் சட்டபூர்வமற்ற புகலிடக் கோரிக்கையாளர்கள்" என்று பார்க்கப்பட்டார்கள். அகதிகள் விவகாரம் அரசியல் மேடைகளில் முக்கிய இடம் பிடிக்கத் தொடங்கியது.

படகுகளில் வரும் புகலிடக் கோரிக்கையாளர்கள் கட்டாயத் தடுப்பில் வைக்கப்படுவார்கள் என்ற கொள்கையைத் தொடர்ந்து கடைப்பிடிப்பதில் அவுஸ்திரேலிய அரசு திணற ஆரம்பித்தது. அகதி விண்ணப்பங்கள் பரிசீலிக்கப்பட்டு முடிவு எடுக்கப்படுவதில் இருந்த தாமதம், தடுப்பு மையங்களிலிருந்து வெளிப்படுபவர்களை விட புதிதாக வருபவர்கள் சில மடங்குகளாக அதிகரிக்கும் நிலைமையை ஏற்படுத்தியது. தடுப்பு மையங்கள் நிரம்பியமையால் புதிய மையங்கள் திறக்கப்பட்டன. மையங்களிலும் அமைதியின்மைகள் ஏற்பட்டன. கட்டங்களைத் தீ வைத்தல், மையங்களை விட்டு வெளியேறல், கைகலப்புகள் போன்ற எவற்றிலும் தமிழர்கள் பங்குபற்றாத போதிலும் கெட்ட பெயர் எல்லோரிலும் தான் ஒட்டியது. முன்னர் அரசில் இருந்த லிபரல் - நாஷனல் கூட்டணி மட்டுமல்ல, தாமும் கடுமையானவர்கள் தான் என்று காட்டும் பொருட்டு சில நடவடிக்கைகளை எடுக்க லேபர் அரசு நிர்ப்பந்திக்கப்பட்டது.

அதுவரை எல்லாப் புகலிடக் கோரிக்கையாளர்களும் நாட்டில் வைத்தே பரிசீலிக்கப்படுவார்கள் என்று சொல்லி வந்த அவுஸ்திரேலிய அரசு, மலேசிய அரசுடன் 2011ஆம் ஆண்டின் ஜூன் மாதத்தில் ஓர் அகதிகள் பரிவர்த்தனை ஒப்பந்தத்தில் ஒப்பம் இட்டது. அதன் படி, படகுகள் மூலம் அவுஸ்திரேலியா வரும் 800 புகலிடக் கோரிக்கையாளர்கள் மலேசியா அனுப்பப்படுவர் என்றும் ஐக்கியநாடுகள் அகதிகளாக அங்கீகரித்த 400 பேரை மலேசியாவிலிருந்து அவுஸ்திரேலியா ஏற்கும் என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டிருந்தது. இது அவுஸ்திரேலியாவுக்குப் பிரதிகூலமான ஒன்றாகத் தோன்றிய போதிலும், புதிய படகுகள் வருவதை இது தடுக்கும் என்று அவுஸ்திரேலிய அரசு நம்பியது. ஆயினும், அகதிகளுக்கான ஜெனீவா பிரகடனத்தில் ஒப்பமிடாத மலேசியாவுக்கு சிறுவர்களை அனுப்பக் கூடாது என்று வாதித்து, சட்ட நடவடிக்கை ஒன்றின் மூலம் அகதிகளுக்கான செயற்பாட்டாளர்கள் இம்முயற்சியை முறியடித்தனர்.

அவுஸ்திரேலிய அரசின் இத் தோல்விகளைத் தமக்குச் சாதகமாகப் பயன்படுத்திய எதிர்க்கட்சிக் கூட்டணி நாட்டின் எல்லைகளைத் தாமே பாதுகாக்கும் வல்லமை கொண்டவர்கள் என்று பிரகடனம் செய்தது. வரும் படகுகளைக் கடலில் வைத்து திருப்பி புறப்பட்ட இடங்களுக்கே தாம் அனுப்பி வைப்போம் என்று மார்தட்டியது. ஆப்கானிஸ்தான், ஈரான், ஈராக், பர்மா போன்ற நாடுகளிலிருந்து புறப்படுபவர்களையோ மலேசியா, இந்தோனேசியா போன்ற இடைத்தங்கல் நாடுகளிலிருந்தோ படகு ஏறுபவர்களையோ தடுக்க முடியாத அவுஸ்திரேலிய அரசு இலங்கையைக் குறி வைத்தது.

மே மாதம் 2012ஆம் ஆண்டு இலங்கை சென்றிருந்த அப்போதைய குடிவரவு அமைச்சர் கிறிஸ் போவன் (Chris Bowen) அகதி விண்ணப்பம் மறுக்கப்பட்டவர்கள் திரும்பிப் போவதற்கு இலங்கை ஒரு பாதுகாப்பான இடம் என்று கொழும்பிலிருந்து அறிவித்தார். இலங்கை அரசுக்கு கணிசமான ஒரு நிதியையும் அவுஸ்திரேலியா வழங்கியது. இலங்கையில் அமைதி திரும்பிவிட்டது - தேர்தல்கள் நடைபெறுகின்றன - முன்னைநாள் போராளிகள் கூட மறுவாழ்வு தரப்பட்டு விடுவிக்கப்படுகிறார்கள் - என்பது போன்ற பல காரணங்கள் காட்டப்பட்டு தமிழர்களின் விண்ணப்பங்கள் மறுக்கப்பட்டன. அகதி அங்கீகாரம் கோரிச் செய்யப்பட்ட விண்ணப்பங்கள் மறுக்கப்பட்ட போது அவுஸ்திரேலியத் தமிழர் பேரவை போன்ற தமிழ் அமைப்புகளையும் அகதிகள் செயற்பாடுகளுக்கான கூட்டமைப்பு போன்ற பொது அமைப்புகளும் வழக்குகளைத் தொடுத்து புகலிடக்கோரிக்கையாளர்கள் திருப்பி அனுப்பப்படுவதையும் தடுத்தனர்.

அகதி விண்ணப்பங்களுக்கு முடிவு எடுப்பதில் இருந்த தாமதங்களைச் சமாளிப்பதற்காக மட்டுமன்றி, தடுப்பில் இருப்போருக்கான உடல் - மன நலக்குறைபாடுகள் பற்றி சர்வதேச மற்றும் உள்ளூர் நிறுவனங்கள் தொடர்ந்து அரசாங்கத்துக்குச் செய்த பரிந்துரைகள், புகலிடக் கோரிக்கையாளர்களை இடைக்கால ஏற்பாடுகளுடன் சமூகத்தில் வசிக்க விடும் நிலைமையை ஏற்படுத்தின. Bridging Visa எனும் குறுகிய கால விசாக்களுடன் புகலிடக் கோரிக்கையாளர்கள் விடப்பட்டதும், அவர்களில் சிலர் வேலை செய்யும் அனுமதியுடனும் சிலர் அனுமதி இல்லாதும் விடப்பட்டதும், வீடுகள் பெற்றுக் கொள்வதில் அவர்கள் முகம் கொடுத்த சிரமங்களும் அவர்களைத் தொடர்ந்தும் ஊடகங்களின் கவனத்திலும் மக்களின் உரையாடல்களிலும் தொடர்ந்தும் வைத்திருந்தன.

வழமையாக வந்து கொண்டிருந்த படகுகளின் எண்ணிக்கையைப் பல மடங்குகள் தாண்டி திடீரென இலங்கையிலிருந்து படகுகள் வர ஆரம்பித்தன. இப்பயணங்களில் பல, இலங்கை அரசினதும் முக்கிய பிரமுகர்களினதும் ஏற்பாடுகளின் கீழே தான் நடைபெறுகின்றன என்றும் பல படகுகள் சர்வதேசக் கடல் எல்லை வரை கொண்டுவது விடப்படுகின்றன என்று செய்திகள் கசிய ஆரம்பித்தன. தமிழர்கள் செறிந்து வாழும்

இடங்களிலிருந்து இளைஞர்களை வெளியே அனுப்புவதன் மூலம் அந்த இடங்களை ஆக்கிரமிக்க வழிவகுத்தல், இளைஞர்கள் புறப்பட்ட குடும்பங்களைத் தமது கட்டுப்பாட்டுக்குள் வைத்திருத்தல், தமது வேலைகளுக்குத் துணைபோகும் தனி மனிதர்களுக்கும் குழுக்களுக்கும் ஒரு வருமானத்தை ஈட்டிக்கொடுத்தல், தமக்கு ஆதரவான பலரை அவுஸ்திரேலியா அனுப்புதல், தம்மை ஐக்கிய நாடுகள் மனித உரிமைகள் ஆணையத்தில்




தோலுரிப்பதில் துணைபோன லேபர் அரசை மேலும் அகதிகளை அனுப்பிச் சிரமப்படுத்தல், இதற்காகத் தம்மிடம் ஓடி வரும் அவுஸ்திரேலிய அரசிடம் பேரம் பேசுதல் எனப் பல வேறு காரணங்களுடன் இலங்கை அரசு இவ்வாறான பயணங்களை அனுமதிக்கிறது என்று அவுஸ்திரேலிய தமிழ் அமைப்புகளும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பும் விளக்கம் கற்பித்தன. இதற்கிடையில் பல படகுகளை இலங்கையிலிருந்து புறப்படும் போது பிடித்ததாகவும் இலங்கைக் கடற்படை தெரிவித்தது.

வருபவர்களில் என்ன விகிதத்தினர் உண்மையாக அகதி நிலைக்குத் தகுதி பெற்றவர்கள் என்று தெரியாது எல்லோரையும் எப்படி ஆதரிப்பது என்று ஒரு பக்கமும், இவர்களைப் பிடித்துக் கொடுக்க வேண்டும் என்று ஒரு பக்கமும், வருபவர்களில் போருக்குப் பிந்திய செட்டிகுளம் முகாம்களிலிருந்தும் வெளிப்பட்ட உண்மையான அகதிகளும் இருந்ததால், வருபவர்களை முறையற்ற புகலிடக் கோரிக்கையாளர்கள் என்று பொதுவாகப் பேசக்கூடாது என்று இன்னொரு பக்கமுமாக தமிழ் அமைப்புகளும் குழம்பியிருந்தன.

அவுஸ்திரேலிய அரசாங்கம் படகுகளில் வரும் புகலிடக் கோரிக்கையாளர்களைக் கையாள்வதில் பரிந்துரைகளைச் செய்ய வேண்டும் என்ற வேலைத்திட்டத்துடன் மூவர் கொண்ட ஒரு சுயாதீனக் குழுவை நியமித்தது. ஒகஸ்ற் 2012இல் அவர்கள் 21 பரிந்துரைகளைச் செய்தார்கள். அயல்நாடுகளில் புகலிடக் கோரிக்கையாளர்களைத் தங்க வைத்துப் பரிசீலித்தல், அகதி விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப்பட்டாலும் அவர்களது குடும்பங்களைக் கொண்டுவருவதில் கட்டுப்பாடுகளை விதித்தல், மக்கள் புறப்படும் நாடுகள் மற்றும் படகுகள் புறப்படும் இடைத்தங்கல் நாடுகளுடன் இணைந்து வேலை செய்தல் என்று பல அம்சங்களை இந்தப் பரிந்துரைகள் அடக்கின. இருப்பினும், ஒரு தீர்வு எட்டப்படவில்லை. அவர்களின் பரிந்துரைகளில் ஒன்றைப் பின்பற்றி பப்புவா நியுகினி (Papua New Guinea), நௌறு (Nauru) என பசிபிக் நாடுகளுக்குச் சில புகலிடக் கோரிக்கையாளர்கள் அனுப்பப்பட்டனர். இது அகதிகளின் வருகையைக் கட்டுப்படுத்தும் என்று அரசு நம்பியது.

இதேவேளை, அடுத்தடுத்து வந்து சேர்ந்த பல படகுகளில் பெருமளவு சிங்கள மற்றும் முஸ்லிம் மக்களும் இருந்ததை அடையாளம் கண்ட அவுஸ்திரேலிய அரசு இலங்கையர்களுக்கு முதல் சல்லடை (screening) முறை ஒன்றை அறிமுகப்படுத்தியது. வெளி உலகத்துக்கு அதிகம் தெரியப்படுத்தாது ஒரு குறுகிய விசாரணையுடன், "தகுந்த பயணப்பத்திரங்களைக் கொண்டிருக்காததுடன் அகதிக் கோரிக்கையை முன்வைக்காதவர்கள்" என்று காரணம் காட்டி சிறு பணத் தொகையையும் கையில் கொடுத்து இலங்கையர்கள் திருப்பி அனுப்பப்பட்டார்கள். அவர்கள் கட்டுநாயக்காவில் போய் இறங்குவதையும் நீர்கொழும்பு தடுப்புக்காவல் மையத்துக்கு முன்னால் தெருக்களில் வரிசையாக அழைத்துச் செல்வதையும் ஊடகங்கள் முன்னிடம் கொடுத்து வெளியிட்டன. சிங்கள - முஸ்லிம் மக்கள் என்று அவுஸ்திரேலிய அரசு சொன்னாலும் தமிழர்களும் அவசர அவசரமாகத் திருப்பி அனுப்பப்பட்டனர்.



இதேவேளை அவுஸ்திரேலியத் தமிழர் பேரவையும் அகதிகள் செயற்பாடுகளுக்கான கூட்டமைப்பும் இணைந்து 2012 டிசம்பர் மாதத்தில் ஒரு வழக்கைத் தாக்கல் செய்து இலங்கைக்குத் திருப்பி அனுப்பப்படவிருந்த 57 தமிழர்களைத் தடுத்து நிறுத்தின. அதைத் தொடர்ந்து screening மூலம் அவசர முடிவு எடுத்து தமிழர்கள் திருப்பி அனுப்படுவது தற்காலிகமாக நிறுத்தப்பட்டது

## விக்கி-அவுஸ்திரேலியா

அவுஸ்திரேலிய வெளிவிவகார அமைச்சர் பொப் கார் (Bob Carr) டிசெம்பர் 2012இல் இலங்கைக்குப் பயணம் மேற்கொண்டார். புலனாய்வு உள்ளிட்ட தகவல் பரிமாற்றம், கடற் பயணங்களைத் தடுப்பதில் கடற்படைக்கு உதவுதல், செய்தி மற்றும் விளம்பர ஊடகங்கள் மூலம் பயணங்களைத் தடுக்கும் முறைகளை மேற்கொள்ளல், 45 மில்லியன் பணக்கொடுப்பனவு மூலம் கரையோர மக்களது வாழ்வு நிலையை மேம்படுத்தி புறப்படும் முனைப்புகளைத் தடுத்தல் என்று அவுஸ்திரேலிய அரசு நேசக்கரம் நீட்டியது. முத்தையா முரளிதரன் தமிழிலும் லசித் மலிங்க சிங்களத்திலும் ஆபத்தான கடற்பயணங்களை மேற்கொள்ள வேண்டாம் என்று தொலைக்காட்சிகளில் வந்து ஆலோசனை சொன்னார்கள்.

எதிர்க்கட்சியின் துணைத் தலைவி ஜூலி பிஷப் (Julie Bishop) மற்றும் குடிவரவுப் பேச்சாளர் ஸ்கொட் மொறிசன் (Scott Morrison) ஆகியோர் பெப்ரவரி 2013இல் இலங்கை போனார்கள். தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் அனுசரணையுடன் வடக்கு - கிழக்குக்குப் பயணம் செய்த அவர்கள் இலங்கையிலிருந்தே அங்குள்ள நிலைமைகள் பற்றிப் பேசினார்கள். தமிழ்ப்பகுதிகளில் அபிவிருத்திகள் நடப்பதாகவும் தமிழர்கள் தமது பிரச்சனைகள் பற்றித் தம்மிடம் அதிகம் பேசவில்லை என்றும் உண்மையில் இலங்கையில் இருந்து புறப்படும் படகுகள் கடலில் வைத்தே திருப்பி அனுப்பப்படுவது தான் முறை என்றும் அவர்கள் சொன்னார்கள். தமது கருத்துகள் தவறான முறையில் வெளிப்படுத்தப்பட்டு விட்டதாக தமிழ் தேசியக் கூட்டமைப்பு செய்த முறையிடல்கள் அவுஸ்திரேலியாவின் பிரதான ஊடகங்களில் இடம்பிடிக்கவில்லை

அவுஸ்திரேலியாவின் அடுத்த தேர்தல் வரும் செப்ரெம்பரில் நடைபெறும் என்று ஏற்கெனவே அறிவிக்கப்பட்டுள்ளது. குடிவரவு தேர்தல் பிரசாரத்தில் ஒரு முக்கிய இடம் பிடிக்கும் என்பது, ஏற்கெனவே தெளிவாகியிருக்கிறது. ஏப்ரல் 2013இல் மேலும் 20 இலங்கை அகதிகள் திருப்பி அனுப்பப்பட்டிருப்பதாக அவுஸ்திரேலிய அரசு அறிவித்திருக்கிறது. இவர்களுடன் சேர்த்து ஒகஸ்ற் 2012 இலிருந்து ஏப்ரல் 2013 வரை மொத்தம் 963 புகலிடக் கோரிக்கையாளர்கள் இலங்கைக்குத் திருப்பி அனுப்பப்பட்டிருப்பதாகவும் அவர்களுள் 756 பேர் சொந்த விருப்புக்கு மாறாகவே அனுப்பட்டிருப்பதாகவும் புதிய குடிவரவு அமைச்சர் பிரண்டன் ஓகொணர் (Brendan O'Connor) தெரிவித்திருக்கிறார்.

மனிதாபிமானம் மற்றும் அகதிகளுக்கான பிரகடனம் எல்லாவற்றையும் தாண்டி அகதிகள் விடயத்தில் வாக்குப்பெட்டியைக் குறிவைத்து லேபர் கட்சியும் லிபரல்-நாஷனல் கூட்டணியும் மோதிக் கொள்ளப்போகின்றன. அவுஸ்திரேலியா என்பது குடிவரவாளர்களாகப் படகுகளிலும் கப்பல்களிலும் வந்தவர்களாலேயே கட்டி எழுப்பப்பட்டது என்பதோ, அவுஸ்திரேலியாவின் கிட்டத்தட்ட 200,000 புதிய குடிவரவாளர்களில் அகதிகள் பத்து வீதத்துக்குக் கீழ் என்பதோ வாக்குத்தாளை எடுக்கையில் வாக்காளர்களின் நினைவுக்கு வரப்போவதில்லை. மாறாக, ஓட்டைப் படகுகளில் பெருந்தொகைகளில் அடைக்கப்பட்டு வந்த அடையாளம் தெரியாத பிறநாட்டார்களும் அவர்கள் தீயிட்ட தடுப்பு மையங்களும் இவர்கள் சட்டவிரோதமாக வந்தவர்கள் என்ற பிழையான கருத்தோட்டமுமே அவர்களது கண்களில் நிழலாடப் போகின்றன. இதைச் சரியாகத் தெரிந்து வைத்துக் கொண்டு அரசியல் கட்சிகள் தமது நடவடிக்கைகளையும் பிரசாரங்களையும் திட்டமிடப்போகின்றன.

இதேவேளை, ஒரு சிறு தேக்கத்தின் பின இலங்கையிலிருந்து மீண்டும் படகுகள் புறப்படத் தொடங்கியிருக்கின்றன.

# இசைவானின் கவிஞாயிறு கண்ணதாசன்

சுவாசிப்பு நின்ற கணத்திலேயே உயிரின் ஊசலாட்டம் நின்று விடுகிறது. தமிழை நேசிப்பதே என் சுவாசம்

கண்டு பழகி நேசிப்பது ஒருவகை காணாததை கண்டு கேட்டு தொட்டு உணர்ந்து புலன் ஐந்தும் புரிந்துணர்ந்து நேசிப்பது என்பது மற்றொருவகை.

மலை முகட்டை நேரிடையாக தொட்டு முத்தமிடும் நேசிப்போடு மலையின் அடிவாரத்தில் மௌன தவத்தில் இருக்கும் சிறு கூழாங் கற்களின் பிடிவாதம் எனக்குப் பிடிக்கும். திரை இசைவானில் பட்டொளிவீசிய பகலவன் கவியரசர். அதனால்தான் அவர் முகவரியை எழுதும்போது என் எழுதுகோல் கனக்கிறது.

கண்ணதாசன் அவர்களை அண்ணாந்து பார்க்கிறேன். கணிப்பின் எல்லைக்கும் எட்டாத உயரம். கற்றும் கரைகாண முடியாத அறிவு நூல் நிலையம்.

எட்டியவரை தொட முனைகிறேன். நிலவை தொட்டுப் பார்க்க ஆசைதான். அது எட்டாதபோது கிட்டவில்லையே

**கபிலன்**
**ரிச்மண்ட் ஹில்**

என்ற கவலைக்குள் வீழ்ந்துவிடாமல் யன்னல் வழியே நிலவை ரசிக்கிறேன். விட்டுவிடுங்கள்.

ஒவ்வொரு தனி மனிதனுக்குள்ளும் ஆயிரம் ஆயிரம் போராட்டங்கள் துயரங்கள் பூப்பூக்கும் காதல் நந்தவனங்கள்....புயலடித்து சட்டென்று சருகாகும் சோகங்கள்.

சட்டி சுட்டதடா கை விட்டதடா என்று உதிர்ந்துபோகும் சந்தோஷங்கள் சிரித்துக் கொண்டே அழுவதற்கும் அழுதுகொண்டே சிரிப்பதற்கும் அவனிடம் கவிதைக் கனிரசம் இருந்தது.

அதனால்தான் எந்த நிலையிலும் எனக்கு மரணமில்லை என்ற கவிஞரின் தீர்க்க தரிசனம் சாத்திமானது.

கண்ணதாசன் பிறந்தார் என்பது பொருட் குற்றம் அல்லவா பிறப்பு என்பது எல்லா உயிர்க்கும் பொதுவென்றால் இவரின் தோற்றம் பிறப்பல்ல. இன்னும் பல கோடி நூற்றாண்டு மக்கள் மனங்களில் கொலுவிருக்கும் அற்புத மனிதர் பிறப்பதில்லை.....அவதாரம்....... அவரித்தார் என்பதே சத்தியமானது.

கவியரசர் பல செய்திகளின் தொகுப்பு. அத்தனையும் அறிவுக்கு அருமருந்து தமிழுக்கு அவர்கொடுத்து சீர்வரிசை ஏராளம்.

சொல்லில் அழகு தமிழிற்கு இயல்பே எனினும் சொல்லும் அழகு கண்ணதாசனுக்கே உரியது.



தமிழும் தமிழிசையும் காதலும் வீரமும் கலைத் திறமும் இலக்கிய நயமும் குன்றாமல் வாழ்வியல் ஏற்றத் தாள்வுகளின் எதார்த்தங்களை பாமரனும் கேட்டுச் சுவைத்து அதன்வழி ஒழுகிட கதை கட்டுரை கவிதைகள் மட்டுமல்லாமல், திரை இசைப் பாடல்களாகவும் கொடுத்த காவியக் கவிஞனை, கவி இமயத்தை ஞான குருவாக நேசிக்கின்ற காரணத்தால் கண்காணாக் குருவை மனக் கண்முன்னே வைத்து வித்தை கற்று வியப்புற வைத்த ஏகலைவனைப் போல்!.....

கவிப் பேரரசர் தந்த திரை இசைத்தேன் அமுது. உண்டதும் உவகை கொண்டதும் அதனை உங்களுக்கும் பந்தி வைத்து பரிமாறி இன்புறும் நோக்கோடு இந்த தொடரை ஆரம்பிக்கிறேன்.

இதுவரை முகவுரை. இனி வரும் முற்றங்களில் கவியரசரின் திரையிசைப்பாடல்களில் வரும் நயம்பற்றி நயம்படப் பேசுவோம்!

# திணை மயக்கம்

**சீதா - மொன்றியல்**

மனிதன் மட்டும் திணையில் உயர்வென்றும், மற்ற எல்லா உயிர்களும் திணையில் தாழ்வென்றும் மனிதநீதி வகுத்திருப்பது சரியா? தப்பா?

இந்த திணை மயக்கம் ஏன் இப்போது!

ஆறாம் அறிவு ஒன்றுதான் மனிதனை உயர்திணை என்று கொள்வதற்கு காரணம் என்றால்!...........

அல்லவை நீக்கி, நல்லவையே மனிதர்கள் செய்வார்களானால்!...... இப்போது திணை மயக்கத்திற்கு அவசியம் ஏற்பட்டிருக்காது

சோழப் பேரரசின் வாயிற்கடை மணி ஓசை கேட்கிறது. யார்க்கும் இடர்வரின் அன்றி ஒலிக்காத மணி அன்று ஒலித்தது ஏனென்று பார்த்துவாருங்களென காவலரை மன்னன் அனுப்புகின்றான்.

காவலர் சென்றார்........கண்களில் நீர்பாய தன் வாயால் மணிதொங்கும் கயிறு பிடித்து இழுத்துப் பசுவொன்று தன் துயரை மன்னர்க்கு உரைத்தது கண்டு காவலர் திகைத்தனர்!.......

அரச குமாரன் வீதி உலா வரும்வழியில் இப்பசுவின் கன்றின்மேல் தேரேற்றிக் கொன்றனன் என அங்கோர் வழிப்போக்கன் நடந்தது விளம்ப, சோழமன்னன் அதுகேட்டு துடித்தான் உயிரெனும் ஒன்று எல்லா உயிர்க்கும் பொதுவே அதனால்

தன் இளங்கன்றை பறிகொடுத்து துயருறும் பசுவென யானும் தன் இளங்குமரனை இழந்து துயர்ப்படுவதே மனுதர்மம் என்று முடிவெடுக்கின்றான்.

உயிர்க்கொலை செய்தார்க்கு மரண தண்டனை வழங்குவதே அரசமுறைமை என்பதால் தன் இளங்குமரனை இழுத்து வந்து தேர்க்காலில் இட்டு அவன்மேல் தேரேற்றிக் கொன்றானே மனுநீதிச்சோழன் அவனால் அன்று உயர்திணை மனிதர் என்று உறுதி செய்யப்பட்டது

காட்டு விலங்கை அடித்துக் கொன்று தின்ற ஆதிமனிதன் உயர் திணை என்றும் மற்ற உயிர்களெல்லாம் திணையில் தாழ்வென்றும் சொன்னதைக்கூட.......... பசியும் படைப்பும் அதுவென அமைதி கொள்ளலாம்.

செவ்வாய் கிரகத்தில் வாழ இடம்தேடும் விஞ்ஞான யுகத்தில் வாழும் மனிதன்.

இணைய வலைக்குள் உலகைச் சுருட்டி சட்டைப் பைக்குள் கொண்டு திரியும் அறிவியலின் உச்சத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் மனிதன்.

இன்று, ஒருவரை ஒருவர் கொன்று குவிப்பதும், காட்டு விலங்கினும் கொடிதாய் பெண்களை பேரிழிவு செய்து கற்பைச் சூறையாடி கொடுமைகள் செய்வதும் உலகமெங்கும் மலிந்திருப்பது கண்டபின்னும் மனிதரை எப்படி உயர் திணையாகக் கொள்ள முடியும்!

எந்த விலங்குமே தன் இனத்தை தானே அடித்துக் கொல்வதாகவோ, பாலியல் கொலைவெறி ஆட்டம் ஆடுவதாகவோ, ஆய்வுகள் எதுவும் சொல்லவில்லையே!

இப்போது சொல்லுங்கள் உயர் திணை மனிதரா? விலங்குகளா!

திணை மயக்கம் தீருவது எப்போது!...................



# காத்திரு!

**சிவா, ஐக்கிய அமெரிக்கா**



பசித்திரு! அதையே நினைத்திரு! முனைப்போடு காத்திரு! காத்திருக்க காத்திருக்க நினைத்தது நிறைவேறும். அதுவரை காத்திரு! இலையுதிர் சோகத்தில் தம்மை மாய்த்துக் கொள்ளாமல் மரங்கள் செய்யும் காத்திருப்பே வசந்தப் புன்னகை தவழ்வதற்கு காரணமானது.

தனது வானத்திலும் ஒருநாள் மழைமேகம் கூடும் என்ற நம்பிக்கையோடுதான் இன்னும் பாலைவனங்கள் எரிந்து நீறாகிப் போய்விடாமல் காத்திருக்கின்றன. அதனால் காத்திரு!

சிப்பிக்குள் விழுந்த நீர்த்துளி காத்திருக்கவில்லை என்றால் முத்தாகும் வாய்ப்பை இழந்துவிடும். இன்றைய பொழுது உனக்காக புலரவில்லை அதனால் மனம் உடைந்து விடாதே!........... ஒருவேளை........நாளை உனதாகலாம் அதற்காக காத்திரு!

கூட்டுப் புழுவின் காத்திருப்பு வண்ணத்துப் பூச்சியாய் மாறும் வரம்பெற்றுக் கொடுத்துவிடுகிறது....பல ஞானிகளினதும் யோகிகளதும் வெற்றிக்கு காத்திருப்பே காரணமானது

சாதனையாளர்கள் அரை நொடியில் பெற்ற வெற்றிக்குப் பின்னால் நீண்ட காத்திருப்பின் கதையிருக்கும்

மடைத்தலையில்.........ஓடுமீன் ஓட உறுமீன் வரும்வரை காத்திருக்குமாம் கொக்கு.

கண்ணகியின் கற்புக்கு பெருமை சேர்த்தது அவளின் காத்திருப்பே அன்றி வேறில்லை..... முதலில்,....பிரிந்த கோவலன் மீண்டும் வருவான் என்று காத்திருந்தாள். பின்னர் பாண்டியனின் தவறான தீர்ப்பால் கோவலன் கொலையுண்டான் என்ற சேதி கேட்டதும் உடன்கட்டை ஏறும் அக்கால வழக்கத்திற்கு மாறாக உயிர்தரித்துக் காத்திருக்கிறாள்..............

தன் கணவன் கள்வன் இல்லை என்பதை நிரூபிக்க அவள் எடுத்துக் கொண்ட காத்திருப்பே கற்புக்கரசி என்ற அந்தஸ்த்தை சரித்திரத்தில் அவள் பெறுவதற்கு காரணமானது. அதனால் காத்திருப்பு கனமானது.

தாயாக வேண்டுமானால் பத்துமாதம் பொறுமை காத்து காத்திருந்தால் மட்டுமே தாயாக முடியும்.

ஹைதராபாத் உஸ்மானியா பல்கலைக் கழகத்தின் பொன்விழாவில்(1967) கலந்துகொண்ட சர்.சி.வி.ராமன் அவர்கள் வைரங்களைப் பற்றிய பேருரை ஒன்று ஆற்றினார். ஒருமாணவன் எழுந்து "ஐயா! வைரங்களைப் பற்றியும் அதன் தன்மைகள் பற்றியும் தெளிவாகச் சொன்னீர்கள் நன்றாக புரிந்துகொண்டோம் ஆனால் வைரம் செய்வது எப்படி என்று சொல்லவில்லையே?" எனக் கேட்டான். அதற்கு சட்டென்று பதில் அளித்த சி.வி. ராமன் அவர்கள்.

அது மிகச் சுலபம் ஒரு கரித்துண்டை எடுத்து, பூமியில் ஆயிரம் அடி ஆழத்தில் புதைத்துவிட்டு ஆயிரம் ஆண்டுகள்

காத்திரு என்றார் அவர்.

கனவுகள் மெய்ப்பட காத்திருப்போம்!

# இடை

**பொ.கருணாகரமூர்த்தி**
**ஜேர்மனி**

அது பேர்லினில் இருபத்து நான்கு மணி நேரமும் திறந்திருக்கும் ஒரு றெஸ்ற்ரோறன்ட். கோப்பியில் மட்டும் பத்துக்கும் மேற்பட்ட வகைகள். நம் தேர்வுப்படி நொடியில் அரைத்து கமகமக்கப் போட்டுத் தருவார்கள். வீதியில் ஐநூறு மீட்டருக்கு மிதந்துவரும் கோப்பியின் மணம் சேர்ட்டில் பிடித்து ஆளை உள்ளே இழுக்கும். அது இருக்கும் வழியாக நானும் வரவேண்டியிருக்கவே மேலே கடந்து போக முடியாது உள்ளே இழுபட நேர்ந்தது.

கிறிஸ் பண்ணிய றிப்பும், தொட்டுக் கொள்ளக் காரமான பாபெகியூ ஸாசும், கோப்பியும் வாங்கிக்கொண்டு ஒரு மூலையில் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தேன்.

நாலு இளம் பெண்கள் ஏதோ இடையைக் காட்டுவதற்கான ஒரு போட்டியில் பங்குபற்றி விட்டு நேரே வருபவர்கள் மாதிரி பேரிடை முழுவதும் தெரிய உடுத்திக் கொண்டு நடக்கையில் முக்கோண ஜட்டிகள் தில்லானா ஆட அட்டகாசமாக உள் நுழைந்தார்கள். கோடைகாலம் இளசுகளின் உடைகள் கொஞ்சம் மனதை அலைக்கழிப்பதாகத்தான் இருக்கும். ஆனாலும் இது அநியாயத்துக்கும் அதிகம். அன்று நான்தான் அதிகம் வதைபட வேணுமென்று நியதியாக்கும். அல்லது அத்தனை காலியிருக்கைகள் இருக்க அவர்கள் ஏன் அமர்வதற்கு என் ஓரமாகப் போடப்பட்டிருக்கும் மேசையைத் தெரிய வேண்டும்?

அந்த நால்வரிலும் மேசையின் ஓர்ப்பக்கமாக என் பார்வை முழுதாய்ப் படும்படியான இடத்தில் இருந்தவள் அச்சில் வார்த்தெடுத்துப் பொலிஷ் செய்து வைத்த ஒரு பொம்மையைப் போல இருந்தாள். ஏ்ந்தவொரு ஜேர்மன் அழகுப் பாரம்பரியத்தின் நீட்சியோ



இல்லை. ஏதும் இடைக் கலப்பால் விளைந்த அதிசயமோ நோக்குவோரை மூர்ச்சையாக்க வல்லதொரு எழிலைக் கொண்டிருந்தாள்.

170செ.மீ. உயர தேகத்தில் பெயருக்காவது ஒரு மறுவோ, பருவோ, புள்ளியோ இருக்க வேணுமே? அரையில் நேவி நீலநிறத்தில் ஒன்றரை சாணே இருக்கக் கூடிய ஸ்கேட்டும், மேலே தலையணை உறை மாதிரி கையோ கழுத்தோ இல்லாத ஒரு மெல்லிய மீள் தகவுள்ள மார்புக் கச்சையும் (ஸ்றெட்ச் டொப்பிற்கு எப்படி நம் தமிழ்!) பற்றியிருக்க மீதி வனப்பு முழுவதும் காற்றாடிக் கொண்டிருக்கிறது. சின்ன வெள்ளிமணி மாட்டியிருந்த தொப்புளில் ஆரம்பித்து, மிகமிக ஆழங்களில் பரவிய கற்பனைகளில் என் மனது சுகித்துத்தியங்க, அவர்கள் ஓடர் பண்ணிய சாப்பாடுகள் வந்தன. அவர்கள் ரசித்துச் சாப்பிடத் தொடங்கினார்கள். பார்க்கிறேன் அவள் சாப்பிடக் குனிகையிலாவது வயிற்றில் சின்ன மடிப்புக்கள் விழவேண்டுமே....... ஊகூம்!

குற்றவாளிகளுடன் விவாதிக்க வேண்டியதில்லை. அவர்களுக்குத் தம் குற்றங்களின் முழுப் பரிமாணங்களும் தெரிந்தேயிருக்கும். அவளைப் பார்க்கப் பார்க்க என் மனது முழுக்களவாகி வன்மமாக வளர்ந்து நான் முழுத் திருடனாகிவிட்டிருந்தேன்.

ஒரு யௌவனப் பெண் பார்வையில் பட்டவுடன் ஒரு ஆடவனின் மனதில் தூண்டப்படும் மின்னேற்றங்கள் சமிக்கைகளாகி அவை வேண்டிய ஹோமேன்களைச் சுரக்கவைத்து அவனது இதயத் துடிப்பை அதிகரிக்கப் பண்ணும் வரையிலான தாக்கங்கள் பற்றியும் அவை கடத்தப்படும் வழி பற்றியும் இடையே சிறிது சிந்திக்கிறேன். மாற்றங்கள் இரசாயனம் புரிகிறது. ஆனால் ஆதியிலிருந்தே ஆண்களைப் பெண்களிடம் பிணைத்து வைத்திருக்கும் அவ்வதிசயச் சமிக்கைகளை இந்தப் பெண்களால் மாத்திரமே உற்பத்தியாக்க முடிவதுதான் விந்தையாக இருக்கிறது. ஆனானப்பட்ட அறிவியல் மேதைகளுக்கே பிடிபடாத விஷயந்தானெனினும் அவர்கள் நிரையில் ஞானும் அதுபற்றிச் சற்றே சிந்தித்து வைத்தேன்.

என்னுள் இத்தனை ஹோமோன்களையும் குதித்தோடச் செய்தொரு தீயை வளர்த்துக் கொண்டிருந்தவள், ஏதோ ஞாபகம் வந்தவள் போல் கடித்த பேகரைத் தட்டில் வைத்துவிட்டு கைப்பையுள்ளிருந்து பேனாவைப் போலிருந்த எதையோ எடுத்தாள். அதன் முனையைத் திருகித் திறந்தாள். என்னைக் காந்திக் கொண்டிருந்த பட்டு இடுப்பில் நிதானமாக குத்தி மருந்தை உள்ளே செலுத்தினாள். Diabetes Meletus iiii வியாதியின் மூன்றாவது கட்டத்துக்கு (குணப்படுத்த முடியாதபடி) வந்துவிட்டவர்களுக்கே தாமே போட்டுக் கொள்ளும் இவ்வகை இன்சுலின் ஊசியைக் கொடுத்திருப்பார்கள்.

இப்பொழுது என்மேல் ஒரு நயாகராவே கொட்டியது. என்னுள் ஓங்கிய தீயின் நீண்ட கங்குகள் ஒடுங்கி இல்லாமற் போயின. இவைகள் எதையுமே அறியாமல் தன் பேகரைச் சாப்பிடத் தொடங்கினாள் அவள்.

# சினுவா ஆச்சிபி

**எம்.ரிஷான் ஷெரீப், இலங்கை**

எழுத்தாளர் சினுவா ஆச்சுபி, தனது முதலாவது நாவலுக்கு 'Things Fall Apart' எனும் அருமையான தலைப்பை W.B. Yeats எனும் அயர்லாந்துக் கவிஞரொருவரின் வாக்கியமொன்றிலிருந்து கண்டுகொண்டார். அந்த நாவலில், கொட்டப்பட்ட நீர், பளிங்குச் சீமெந்துத் தரையில் வழுக்கி நகர்வதைப் போல வெள்ளையினத்தவர்கள், அக் கறுப்பினத்தவர்கள் மத்தியில் ஊடுருவியதைச் சொல்கிறது. பூர்வீக மக்கள் தங்கள் நிலத்தில் பெரிதும் மதித்து நடந்த கலாச்சார அடையாளங்கள், சம்பிரதாயங்கள் அனைத்திலும் பெரிதும் மாற்றங்களைக் கொண்டு வந்திருக்கிறது. இந்த ஊடுருவல் "ஒக்கொங்வோ" எனும் மனிதனையும், அவனது குடும்பம், நண்பர்கள் மற்றும் சுற்றம் அனைத்தையும் கொண்டு ஒவ்வொரு மனிதனதும் அடிப்படை ஜனநாயக உரிமைகள் மறுக்கப்பட்டு, அவர்களது வாழ்வை கொடிய இருள் சூழ்ந்ததை மிகவும் ஆழமாகவும், வாசகர்களும் உணரும் வலியோடும் தந்திருந்தார் சினுவா ஆச்சுபி. அந் நாவலை நைஜீரியக் கிராமமொன்றில் பிறந்த, தான் அறிந்த சம்பிரதாயபூர்வமான பழக்க வழக்கங்களோடு, அடிமை பூமியின் இன்னல்களை ஆங்கிலத்தில் தந்ததன் மூலம் ஆபிரிக்க நவீன இலக்கியத்தை உலகம் முழுவதும் அறிய வாய்ப்புக் கிடைத்தது. பின்னாட்களில் ஆப்பிரிக்க மக்களின் வாழ்க்கையை வடிவமைத்த எழுச்சிகளுக்கான சக்தியையும், சினுவா ஆச்சுபி குறித்த இலக்கிய பிம்பத்தையும் கட்டியெழுப்ப பெரிதும் உதவியது அந்த முதல் நாவல்தான் என்பதில் சந்தேகமில்லை.

சினுவா ஆச்சுபி வாழ்ந்த தேசத்தில் மிக மோசமான சிவில் யுத்தம் பரவி வந்த காலப்பகுதியில் அவர் அங்கு பல அனுபவங்களோடு வாழ்ந்து வந்தார். அங்கு ஒரு எழுத்தாளராக இருப்பதன் காரணமாக, அரசியல் சக்திகளின் விரோதியாகப் பார்க்கப்பட்டவர், இறுதியில் அத்தேசத்திலிருந்து நாடுகடத்தப்பட்டதன் மூலமே உயிர் பிழைத்தார் என்பதைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும். அவர் அக்காலத்தில் எழுதிய நாவல்கள், சிறுகதைகள், கட்டுரைகள், கவிதைகள் ஆகியன தனது சகோதர மக்களின் வாழ்க்கை நடைமுறைகள் குறித்தும், அழிவுகள் குறித்தும் எழுதப்பட்ட நிஜமான படைப்புக்களாகக் கருதப்படுகின்றன. உண்மையான அடிமை வாழ்வியல் குறித்த நடைமுறைச் சிக்கல்களும், மக்களின் துயரங்களும், கண்ணீரும் அப்படைப்புக்களினூடே சமூகத்தின் பார்வைக்கு வெளிக் கொண்டு வரப்பட்டன.

எதிர்க்கட்சிகளைத் தடை செய்து, தாம் பெற்றிருக்கும் பலத்தை மோசடியாகப் பாவிக்கும் தலைவர்கள் பற்றி தனது படைப்புக்களின் மூலம் சவால் விடவும் சினுவா ஆச்சுபி ஒருபோதும் தயங்கியவரல்ல. சுதந்திரம் பெற்றதாகக் கூறப்படும் ஆபிரிக்க தேசங்களின் அதிகாரிகளின் மெத்தனப் போக்கையும், பேராசையையும் நியாயமானதாகக் கருதும் சமூக மனப்பாங்குகளின் மீது கேள்வியை எழுப்பும்விதமாக சினுவா ஆச்சுபியின் எழுத்துக்கள் அமைந்தன.

எனது அனுபவங்கள் எனப்படுபவை எனது குடியேற்ற உரிமைகள் எனக்



கூறினால் சிலர் ஆச்சரியப்படக் கூடும். எனினும் தானியங்களிலிருந்து மாவு வரைக்கும், அவற்றை அரைக்கும் நிலையங்கள் என எல்லாமும் படைப்பாளர்களுடையவை. உண்மையில் ஒரு தானிய விதையானது, ஏனைய விதைகளை விடவும் போஷணை சக்தியில் மாறுபடக் கூடும். எனினும் எமக்குக் கிடைக்கும் எல்லாத் தானிய விதைகளுக்கும் வரவேற்பு அளிக்கப்பட வேண்டும். அவை பயனுள்ள விதத்தில் பாவிக்கப்பட வேண்டும்" எனக் கூறிய சினுவா ஆச்சுபி எழுதிய 'Chike and the River' எனும் முதலாவது சிறுவர்களின் படைப்புக்கள் அடங்கிய தொகுப்பு 2011 ஆம் ஆண்டில் மீள்பதிப்பாக வெளிவந்திருந்தது. தனது தேசத்தைப் போலவே, பிற தேசங்களிலும் வசிக்கும் மனிதர்களின் வாழ்க்கையோடு ஊடுருவியுள்ள வித்தியாசங்களையும், இரகசியங்களையும், இருக்கக் கூடுமானதும் வேண்டியதுமான ஒற்றுமைகளையும் பற்றிய ஒப்பிடலானது, அத் தொகுப்பில் எழுத்தாளரால் எழுதப்பட்டிருந்தது

தமது எழுத்துக்கள் சிறைச்சாலைச் சுவர்களை ஊடறுத்துச் சென்று வாசிக்கப்படுவதைக் கேள்வியுறும் எந்த எழுத்தாளருக்கும் பெருமகிழ்ச்சி ஏற்படக் கூடும். அவ்வாறானதொரு மகிழ்ச்சியை சினுவா ஆச்சுபியும் அனுபவித்திருக்கிறார். சட்டத்தரணிகள் பலரின் மூலமாக பல வேண்டுகோள்கள் விடுக்கப்பட்டு வெகுகாலத்துக்குப் பின்னர் அரசியல் சிறைக்கைதியொருவரை சந்திக்கக் கிடைக்கும்போது உணரும் வெற்றி மனப்பான்மையையும், மகிழ்வையும் அப்பொழுது உணரலாம். இருபத்தேழு வருடங்களாக அரசியல் சிறைக்கைதியாக இருந்த ஒரு அரசியல் சிறைக்கைதி தமக்குக் கிடைத்த தொகுப்புக்களினூடாகவே சினுவா ஆச்சுபியை அறிந்து கொண்டார். நெல்சன் மண்டேலா எனும் அச் சிறைக் கைதி தான் வாசித்த படைப்புக்களைப் பற்றி இவ்வாறு குறிப்பிடுகிறார்.

"சினுவா ஆச்சுபி எனும் எழுத்தாளரது புத்தகங்களை நான் வாசித்தேன். அவற்றை வாசிக்கும்போது சிறைச்சாலைச் சுவர்கள் உடைந்து வீழ்ந்தன".








முற்றம் தொடர்புகளுக்கு:
+1-647-872-0796
muttram.news@gmail.com
www.muttram.ca

*Do you want to*

# Sell your home in 21 days?

## Investment Properties

**$329,000**



**Scarborough**
Ideal property for an owner /operator or small investor
Lease to own-OAC

**$399,900**



**Toronto**
Fully rented property for any suitable small investor

**$498,000**



**Oshawa**
Care-free investment property with fantastic ROI
Net income over $5,000/m

**$124,900**



**Scarborough**
Only $10,000 down
Monthly rental income $1000

## Businesses for Sale

**$59,000**



**Bar Tavern Pub**
Recapture your investment in an year
Absentee ownership

**$149,000**



**Restaurant/Bar**
Ideal business for a couple w/ little or no experience
Turn key operation

**$19,900**



**Flower/Gift Shop**
Endless possibilities
Community flower & gift shop with very low rent

**$199,000**




**Convenience Store**
High volume convenience store with net profit over $100K

## Residential for Sale

**$359,000**



**Town Home**
Beautiful home in prestigous rouge area for a first time buyer

**$479,000**



**Backsplit**
Rare backsplit 4-BR w/ 3-WR in a quiet neighbourhood

**$519,000**



**Bungalow**
Situated in a mature neighbourhood Close to 401/hospital/shopping

**$629,000**



**Brand New Home**
4-BR 4-WR Home in a new development nested in established area 2,650 sq ft

## Condos

**$228,000**



**McCowan/Eglinton**
Rare opportunity to own a 3-BR fully renovated unit w/ 24 hrs bus service

**$139,000**



**Tapscott/Neilson**
Carries like a rent
2-BR unit ideal for renters or small investors

**$1,500/month**



**Eglinton/Kingston**
Luxury 2-BR + Den
For Rent for people with reliable income

**$234,900**



**McCowan/Steeles**
Fully renovated 2-BR unit in Alton Towers - Purchased with 5% down OAC

# VIJAY THIAGARAJAH

Real Estate Broker

Rapid Realty Inc., Brokerage

416-546-5356 DIRECT

OFFICE 416-259-2002




மார்க்கம் நகரில்..........
வண்ணப் பூக்களின் அணிவகுப்பு
புனிதப் பூக்களின் புன்னகை வசந்தம்!
வாருங்கள்! வண்ணப் பூக்கள் வரவேற்கின்றன!



## MARK FLORIST மார்க் பூக்களஞ்சியம்

கண்களை கவரும் ராஜகோபுரம்போல் மணவறை
வானவில்லில் பின்னலிட்டதுபோல் மலர்மாலைகள்
உதிரிப் பூக்கள் அல்ல புன்னகைக்கும் உயிர்ப் பூக்கள், உல்லாச ஊஞ்சல்,
உங்கள் இல்லங்களை அலங்கரிக்கும் அழகுக்கலைப் பொருட்கள்,
பலூன் அலங்காரம் மற்றும் உங்கள் வீட்டு விசேடங்கள் எதுவானாலும்
எங்களை நாடுங்கள்!

905-477-0047
Cell: 416-728-7704



மரணச் சடங்குகளுக்கு தேவையான
மலர் வளையங்கள்,மலர்க் கொத்துக்கள்

**CASKET SPRAY**
**CASKET DECORATIONS**
**FUNERAL ARRANGEMENTS**

குறைந்த விலையில் நிறைந்த சேவை
எங்களோடு தொடர்பு கொள்ளுங்கள்.






**இளவாலை விஜயேந்திரன்**
**நோர்வே**

01

இலக்கிய உலகில் ஒரு வகையான வனவாசம், அஞ்ஞாதவாசம் என்று தலைமறைவாய் இருக்கிற என்னை, அவ்வப்போது அலைக்கழிக்கின்ற நண்பர்களிற் பத்மநாப அய்யருக்குத் தனியிடமுண்டு. ஓரளவுக்கு அந்த இடத்துக்கு அருகில் வரத்தக்க குறிகளைச் சண்முகம் சிவலிங்கத்தின் மகன் வித்தியானியிடம் காண்கிறேன். பல்வேறு காரணங்களால் இந்தக் குறிப்பை எழுதாமற் போய் விடலாம் என்ற செய்தியைத் தொலைபேசியில் கூறி, அவரிடம் மன்னிப்புக் கேட்க எடுத்த முயற்சி தோல்வியிலேயே முடிந்தது. இன்னும் பல நாட்கள் காத்திருக்கவும் அவர் ஆயத்தமாக இருக்கிற போது எழுதாதிருப்பது ஒரு பாவச் செயல் என்றே தோன்றுகிறது. ஏற்கனவே பாவச்சுமைகளில் அல்லோலகல்லோப்படுகிற எனக்கு இன்னொரு பாவம் வேண்டாமென்ற எச்சரிக்கையால் வித்தியானியின் கால்களிற் சமர்ப்பித்துவிடுகிறேன்.

02

என்னை உள்ளும், புறமும் அறிந்த ஒரு படைப்பாளி வடகோவை வரதராஜன். “படைப்பாளிகளை அவர்களது படைப்புகளூடே பார்ப்பதுதான் நல்லது. அவர்களை நேரிற் சந்தித்தால் அவர்களைப் பற்றி நாம் கொண்டுள்ள பிம்பம் உடைந்து விடும்” என்று ஒரு பேச்சின் இடையிற் குறிப்பிட்டான். ஏதோ பேச்சில் சொல்கிறான் என்று பேசாமல் இருந்து விட்டேன். பிறகொரு நாள் திரும்பவும் அவன் இதைக் குறிப்பிட்ட போது “இவன் என்னைச் சந்தித்த பிறகே இப்படியொரு முடிவுக்கு வந்திருக்கிறான்” என்ற எண்ணம் ஓடியது. பிறகு யோசித்துப் பார்த்ததில் அவனது கூற்றில் உண்மை இருப்பதாகவும் பட்டது. என்னை அறிமுகம் செய்கிற சங்கடத்தாலேயே சில சந்தர்ப்பங்களில் இலக்கியவாதிகளைத் தேடிச் சந்திப்பதைத் தவிர்த்திருக்கிறேன். இயல்பாகவே நான் கதை குறைவு (மனைவியைக் கேட்டுப் பாருங்கள்). ஒரு கட்டத்துக்கு மேல் கதை வற்றி, போலியாகத்தான் கதைக்கிறோமோ என்று எனக்கே சந்தேகம் வருவதுண்டு. ஒரே ஒரு தடவை கல்முனைக்கு வந்திருக்கிறேன் (அல்லது போயிருக்கிறேன்). அது இலக்கியப் பயணம் கிடையாது -நண்பனின் திருமணம். கடற்காற்றுத் தாலாட்ட இரவுபகலாய்ப் பெண்கள் ஆண்களெனப் பேசிக் கழித்த அந்த நாட்களில் சண்முகம் சிவலிங்கத்தை சந்திக்க ஏதோவொரு மனத்தடை (தலைமுறை இடைவெளியோ) இருந்தது உண்மை. உமா.வரதராஜனைச் சந்தித்துப் பேசியதோடு சரி. முட்டாள்தனமான காரியம் செய்துவிட்டதாய் முப்பது வருடங்களின் பின் தோன்றுகிறது. சண்முகம் சிவலிங்கம் என்கிற மனிதன் குறிலா, நெடிலா - என்னைவிட மெல்லியவரா (அதற்கான சாத்தியம் குறைவு) என்பது தெரியாது. அவரது குரலில் கவிதை யொன்றை வாசித்துக் காட்டினால் அந்த நிமிடங்கள் மனதைக் கனதியாக்குமா அல்லது இறகுபோல் ஆக்குமா?

03

இலக்கிய ஆர்வமுடைய எவர்க்கும் தன் ஆயுளில் பல ஆயிரம் கவிதைகளை (அந்தப் பெயரில் வரும் துணுக்குகள் உட்பட) வாசிக்கச் சந்தர்ப்பம் கிட்டும். ஒவ்வொருவரது ரசனைக்குட்பட்டு நூறு கவிதைகளை நினைவு கூர்ந்தாலே அதிகபட்சம்.

நல்ல கவிதைகளில் சில, மற்றோரால் அடையாளங் காட்டப்படுபவை. வேறு சில, ஒருவகைச் சுயம்புத் தன்மை கொண்டு படிக்கிறபோதே மனதிற் பதிந்துவிடும். ‘இது சொற்களின் மாய வித்தை’ என அப்படிச் சுயம்புவாய் எனக்குப் பிடித்த கவிதைகளில் சண்முகம் சிவலிங்கத்தின் ‘எகிப்தின் தெருக்களிலே‘, ‘வெளியார் வருகை‘, ‘ஆக்காண்டி‘, ‘பிரியாவிடை‘ போன்றவற்றிக்கு இடமுண்டு.

இவற்றில் முதல் மூன்றும் அரசியற் காரணத்தாலும் எனது கவனத்தை ஈர்த்தது. என்னதான் பாதி நூறாண்டு வாழ்ந்து முடித்தாலும், ஆண்குறி என்ற சொல்லைக் கவிதையில் பாவிக்கின்ற ‘துணிச்சல்’ எனக்கில்லை (யோனியைப் பாடும் பெண்களே வந்து விட்டாலும்).

நோர்வேயில் இலக்கியம் பேசும் மாதாந்த ஒன்று கூடலில் இந்தக் கவிதை பற்றி ஒரு தடவை உரையாடி, மேலும் நாலு பேரிடம் இந்தக் கவிதையைக் கொண்டு சென்றது மகிழ்ச்சி.

‘வெளியார் வருகையை அழகாய்ப் பதிவு செய்த கவிதைகளில் (நான் படித்தவற்றில்) ‘வெளியார் வருகை’ மிக அழகானது. இந்த விடயத்தைக் கையாண்ட எண்ணற்ற கவிதைகளில் இது மூத்தது- இன ஒடுக்குமுறை கூர்மையுறத் தொடங்கு முன் எழுதப்பட்டது இது.

கவிதைகள்தாம் - அவற்றின் தளங்கள் வேறுவேறாயினும் வெவ்வேறு காரணங்களால் என்னை ஆச்சரியத்துக்கு உள்ளாக்கியவை இவை. எகிப்தின் தெருக்களில் மக்கள் எழுச்சி பெற்றதைக் கவிஞர் படைத்து இத்தனை வருடங்களின் பின் அந்தக் கவிதை அப்படியே பொருந்துவது ஆச்சரியம். எந்த மாற்றமும் இன்றி, நாங்கள் உணர்ச்சியுற்று இருக்கிற துக்கத்தை யாரிடம் சொல்லியழுவோம்?

அந்தக் கவிதை வேறொரு ‘கவிஞர்கள் தீர்க்க தரிசிகள்’ என்ற கூற்றை நாம் நம்புவதில்லை. அந்த நம்பிக்கையீனத்தை இந்தக் கவிதை சற்றே தகர்க்கப் பார்க்கிறது— அதுவோர் அதிகாலைக் கனவாய் இருப்பினும். காலம் கடந்தும் கவிதையின் பொருத்தப்பாடு சற்றே அதிசயிக்க வைக்கிறது.

கவிஞரது படைப்புகள் பற்றி நு.்.மான் ஓரிடத்தில் ‘Plain ஆகத் தோன்றினாலும் போலியாகப் பிரதிபண்ண முடியாதது’ எனக் குறிப்பிடுகிறார். அந்தக் குறிப்பு ‘ஆக்காண்டி’ கவிதைக்காய் எழுதப்பட்டது போலும். ஒரு நாட்டார் பாடலின் தோற்றத்தில் எளிமையாய் மிக ஆழமான அர்த்தங்களோடு எழுதப்பட்ட அதன் வீச்சும் ஓசையும் யாரையும் எளிதில் ஈர்க்கவல்லவை.

04

தமிழ் இலக்கியப் பரப்பில், கவிதைக்கு ஈழத்தவரது பங்கு மகத்தானதென்பதை மறுப்பதற்கில்லை. நல்ல பல கவிதைகளால் சண்முகம் சிவலிங்கமும் அப்பணியிற் தனது பங்களிப்பை வழங்கியிருக்கிறார். அவரது இயல்பு தன்னை விளம்பரப்படுத்துவதல்ல. பல நல்ல படைப்பாளிகள் அப்படித்தான் இருக்கிறார்கள் (சருகுகளின் சத்தம் தான் அதிகம்). அவரது இயல்பு அவரது படைப்புகளை வாசகனிடம் கொண்டு செல்லவும் தடையாய் இருந்திருக்கிறது. நல்ல வேளையாய் அவற்றை வாசகப் பரப்பிற்குக் கொண்டு செல்ல நு.்.மான், பத்மநாபஅய்யர் போன்றோர் உதவியிருக்கிறார்கள். மற்றப் படைப்பாளிகள் மீது வெளிச்சம் படாது காப்பதையே தொழிலாய்க் கொண்ட சிலரிடையே இப்படியும் சிலரது பணி அமைந்திருப்பது நன்றியோடு நினைவு கூரப்பட வேண்டியது.

05

தனக்கு முன்னே எழுதியவர்களது சொற்களைத்தான், தான் பட்டை தீட்டித் தருவதாக சுந்தர ராமசாமி எழுதிய ஞாபகம். நானும் என்போற் பலரும் கவிஞரது படைப்புகளை வாசிப்பதன் மூலம் எமது படைப்பாற்றலைச் செழுமைப்படுத்தியிருப்போம். எம்மை அறியாது நிகழ்வது அது. எமக்கு முன் எழுதிய எழுத்திற்தான்- அவர்கள் இட்ட பாதையிற்தான்- நாம் படைக்கிறோம்; பயணிக்கிறோம் என்பதை யாரும் மறுக்க முடியாது.

நல்ல படைப்பாளியின் வாசகன், தானே படைப்பாளியாக மாறும் வாய்ப்புகள் அதிகம். நல்ல படைப்புகள் ஏனைய படைப்பாளிகளையும் வாசக நிலைக்கு மாற்றும் திறன் கொண்டவை. கவிஞரது படைப்புகள் இந்த ரசவாதத்தை நிகழ்த்த வல்லன.

# பாரம்பரிய விளையாட்டுக்கள்



ஆதிகால மனிதன் தனது வாழ்நாளினை ஒரு சிறிய வட்டத்தினுள் வாழ்ந்து வந்தான். அவனது தேவைகள் குறைவாகவும் ஓய்வு நேரம் கூடுதலாகவும் காணப்பட்ட ஓர் அற்புதமான காலம். அவன் தனது தேவைகளை குறித்த சிறிய கிராமத்துக்குள்ளேயே பூர்த்தி செய்து தன்னிறைவையும் பெற்றுக்கொண்டான். கூடுதலாக பண்டமாற்று முறையூடாகவே தனது வாழ்வாதாரத்தை பூர்த்தி செய்துவந்தான். மின்சார வசதிகளோ தொலைபேசி வசதிகளோ அற்ற காலம். நினைத்தாலே வியப்பாக இருக்கின்றது. அவ்வாறான காலப்பகுதியில் நாம் இருந்திருந்தால் எப்படி வாழ்ந்திருப்போம்.சற்று சிந்தித்துப்பாருங்கள்.

ஆதிகால மனிதன் இயற்கையோடு இயற்கையாக ஒன்றித்து வாழ்ந்தது மட்டுமல்லாது காலநிலையில் ஏற்படும் மாற்றங்களை உணர்வுபூர்வமாக அறிந்து கொண்டான். இதனால் இயற்கையை வழிபட்டான். அதன்காரணமாகவே இயற்கையும் அக்கால மனிதனை அரவணைத்துக் கொண்டது. இவ்வாறு இயற்கையோடு ஒன்றித்து வாழ்ந்த மனிதன் தனது ஓய்வு நேரத்தை சிறிய பல விளையாட்டுக்களை விளையாடுவதன் மூலமாக தான்மட்டுமல்லாது தனது சமூகத்தையும் மகிழ்வித்தான்.

இக்கிராமிய விளையாட்டுக்கள் எந்தவித சர்வதேசஅல்லது தேசிய சங்கங்களால் அங்கிகரிக்கப்பட்ட பெரும்பாலும் நியமித்த அளவுப் பிரமாணங்களையும் கொண்டிருப்பதில்லை.

இவ் விளையாட்டுக்களுக்கான சட்டதிட்டங்கள் அக்கிராமங்களிலேயே உருவாக்கப்பட்டு பாரம்பரியமாக பின்பற்றப்பட்டு வருகின்றன. தற்போது நகர்ப்புறங்களிலும் சில கிராமங்களிலும் பண்டிகைக்காலங்களில் மட்டும் தமது பாரம்பரியம் பேணப்பட வேண்டும் என்ற ஒரு நோக்கத்துக்காக மட்டுமே விளையாடப்பட்டு வருகின்றது. அவற்றில் சில விளையாட்டுக்களைப பற்றி நோக்குவோம்.

### விளையாட்டின் பெயர்: முட்டி உடைத்தல்/ உறியடித்தல்

இதில் இருவர் கொண்ட ஒரு அணி பங்கு கொள்ளும். ஒருவர் கறுப்புநிற துணியினால் கண்கள் கட்டப்பட்டநிலையிலும் மற்றையவர் கண்கள் கட்டப்பட்டவரை வழிகாட்டுபவராகவும் இருப்பர்.

### மைதானமும் உபகரணங்களும்:

பத்து மீற்றர் இடைவெளி கொண்ட இரு சமாந்திர உயரமான கம்பங்களை ஒரு கயிற்றினால் தொடுத்து அக் கயிற்றில் ஐந்து அல்லது ஏழு முட்டிகளில் ஒன்று வர்ணம் கரைக்கப்பட்ட நீரினால் நிரப்பப்பட்டதாகவும் ஏனையவை வெறும் முட்டிகளாகவும் அண்ணளவாக நிலத்திலிருந்து பத்து அடி உயரத்தில் கட்டி வைக்கப்பட்டிருக்கும்.

### நடுவர்கள்:

இரண்டு நடுவர்கள்

### விளையாடப்படும் முறை:

நடுவர் ஒருவர் வழிகாட்டுபவரை மைதானத்தின் ஏதாவது ஒரு பகுதியில் அழைத்துச் சென்று நிறுத்திவைப்பார். மற்றைய நடுவர் கண்கள் இறுக்கமாக கட்டப்பட்ட வீரரை மைதானத்திற்குள் அங்கும் இங்குமாக அழைத்து சென்று வீரரின் நிலையைத்தடுமாற வைப்பார். பின் குறித்த மூன்று நிமிட நேரத்திற்குள் வழிகாட்டும் வீரரின் உதவியைப்பெற்று வர்ண நீரினால் நிரப்பப்பட்ட முட்டியை ஒரே வீச்சில் அடித்து உடைக்கவேண்டும். அவ்வேளையில் பார்வையாளர்கள் எதிரணி வீரர்கள் கோஷமிட்டு முகத்திற்கு தண்ணீர் ஊற்றி ஆரவாரம் செய்வர். தொடர்ந்து அடுத்தடுத்த அணிகள் போட்டியில் பங்கு பற்றும். குறித்த அம்முட்டி உடையும் வரை போட்டி தொடரும்.

**உமாசுதன்**
**திருகோணமலை**

### விளையாடப்படுவதற்கான நோக்கம்:

பெரும்பாலும் மக்கள் தங்கள் ஓய்வுநேரத்தை சந்தோமாக கழிப்பதற்காகவும் மக்கள் ஒன்றுகூடி செயற்படுவதற்காகவும் இவ் விளையாட்டுக்கள் விளையாடப்படுகின்றன.

இருந்தாலும்கூட இதனை வேறு கண்ணோட்டத்தில் பார்ப்போமானால் இங்கு வழிநடத்தல் எனும் தலைமைத்துவ பண்பு வெளிக் கொணரப்படுகின்றது. அதாவது சமூகத்தில் எதிர்மறையான கருத்துக்கள், செயற்பாடுகள், இடையூறுகள் எவ்வளவுதான் காணப்பட்டாலும் தனது தலைவனின் கட்டளையை மட்டும் உன்னிப்பாக அவதானித்து அதன்வழியே சென்று தனது இலக்கை அடைதல் ஆகும்.



# பல்லோரும் போற்றும் பரதக்கலை



**நந்தினி**

உலகிலேயே மூத்தகலை என்று போற்றப்படும் பரதக் கலையைப் பற்றி நான் பேசுவது மின்மினிப் பூச்சியொன்று சூரியப் பேரொளியை விமர்சிப்பது போலாகும்.

மண்ணைவிட்டுப் புலம் பெயர்ந்தபோது உறவுகளை உயிரினும் மேலாக நேசித்த தாய் மண்ணை, ஒன்றாய்க் கூடிப் பேசிமகிழ்ந்த உறவுகள் என்னும் பாசப் பாசறையை விட்டுப் பிரிகின்றோமே என்ற வருத்தம் ஒருபுறமும் உலகமே போற்றும் மேன்மைமிகும் கலையையும் கலாச்சாரத்தையும் இனி மேற்குலக நாடுகளில் எப்படி காப்பாற்றப் போகின்றோம் என்ற வருத்தம் மறுபுறமும் மனதில் ஆழமான தாக்கத்தை கொடுத்தது. இன்று தமிழர் புலம் பெயர்ந்து வாழும் தேசமெங்கும் தமிழ் மொழி கலை கலாச்சாரம் சீரழிந்து போகாமல் பாதுகாக்க பல கலைச் சங்கங்களும் நுண்கலைக் கல்லூரிகளும் உருவாகியிருப்பது கண்டு அடுத்த தலைமுறைபற்றிய நம்பிக்கை திடமாகிறது. குறிப்பாக தமிழர்கள் செறிந்து வாழும் ரொறொன்ரோ மாநிலத்தில் பரதக்கலையை மிகமிக சிறப்பாக வளர்த்துக் கொண்டிருக்கும் நடன ஆசிரியர்கள் மத்தியிலே நானும் ஒரு நடன ஆசிரியையாக பணியாற்றுவது என் மனதிற்கு மிக ஆனந்தம் தருகிறது. நதிமூலமும் ரிஷிமூலமும் அறிவது ஆகாத காரியம் என்பார்கள் அதுபோலவே பரதக்கலையின் மூலம் எதுவென ஆய்ந்து சொல்வது கடினம் எனலாம்

இந்திரன் சபையிலே ரம்பா, ஊர்வசி போன்ற தேவமாதுகள் ஆடிய கலையென்றும், வசிட்டர், விசுவாமித்திரர் போன்ற மகரிஷிகளின் நல்லாசி பெற்றதால் என்றும் அதன் அழகு குன்றாமல் காலத்தை வென்று வாழும் கலையாக ஒளிர்கிறது என்றும், சிவனுக்கு பிடித்தமான கலை என்பதால் பூலோகத்தில் .அது அறிமுகமானது என்றும். அந்த கலை மேலும் சிறப்புற அதற்கு இலக்கண சாஸ்திரத்தை அழகுற பரதமாமுனிவர் எழுதியதால் பரதர்கலை பரதக் கலையாக எங்கள் கைகளுக்கு வந்து சேர்ந்தது என்றும் பரதக்கலைக்கு வரலாறு உண்டு.

அழகியற் சிறப்பும் ஆன்மிகச் சிறப்பும் ஒருங்கே அமைய தெய்வீக நிழலிலே நன்கு வளர்ச்சி பெற்ற இக் கலை மனிதனின் பல்வேறு உணர்வுகளையும் சமய தத்துவக் கருத்துகளையும் நன்கு புலப்படுத்துவதோடு மட்டுமல்லாமல் கண்ணுக்கும் கருத்துக்கும் நல் விருந்தாய் விளங்க வல்லது. பண்டிதர், பாமரர், உயர்ந்தோர், தாழ்ந்தோர், சிறியோர், பெரியோர், முதியோர் முதலிய எல்லாப் பருவத்தாரையும் ஒன்றாய் ஈர்க்கும் தனித்துவத்தோடும், சமூக பொருளாதார ஏற்றத் தாழ்வுகளையும் வேறுபாடுகளையும் கடந்து எல்லோரும் சமத்துவமாக கண்டு களிக்கத் தக்கதுமான உன்னத சக்தியை தன்னகத்தே கொண்ட பெருமிதத்தோடு நிமிர்ந்து நிற்கும் ஒரே கலை பரதக்கலைதான் என்று அறுதியிட்டு கூறமுடியும். இந்திய மண்ணிலே மிகவும் ஆழக் கால்பதித்து செறிந்து வளர்ந்த காரணத்தால் இது பாரதக் கலையாகி பரதக் கலையென பேர்பெற்றது என்று சொல்வாரும் உளர். இன்று இந்தியாவிலுள்ள பிரதான சாஸ்திரீய நடனங்களாகிய பரத நாட்டியம், கதகளி, கதக், மணிப்புரி, ஒடிசி, குச்சுப்புடி ஆகியவற்றின் கூட்டணியாகவும் தமிழகத்திற்கே சிறப்பாக மிளிர்வதுமான நடனக் கலையினைக் குறிப்பதாகவே பரதக்கலை அமைந்துள்ளது.

இந்தியக் கலைகளிலே வளமும் சிறப்பும் வாய்ந்த நடனக் கலையின் சிறப்புக்களையும் பயன்பாடுகளையும் பற்றி பரதர் காலம் தொட்டே பலர் குறிப்பிட்டுள்ளனர். நான்கு வேதங்களின் சாரமாகவும் யாவருக்கும் பொதுவாகவும் உள்ளதனால் பரதக்கலை ஐந்தாவது வேதமெனப் பரதமாமுனி பாராட்டியுள்ளார்.

நாட்டியத்திலே காட்ட முடியாத ஞானமோ, சிற்பமோ, கல்வியோ, கலையோ, யோகமோ, செயலோ ஒன்றுமில்லை. சாஸ்திரங்கள் சிற்பங்கள் அனைத்தையும் இதில் காட்டலாம். பிற்காலத்தில் வாழ்ந்த நந்திகேஸ்வரர் இக்கலையின் பல்வேறு உலகியல் ஆன்மீகச் சிறப்புக்கள் பயன்பாடுகளைக் குறிப்பிட்டு பேரின்பத்தை இதன் மூலம் பெறலாம் எனக் குறிப்பிட்டுள்ளார். மலர் நைவேத்தியம் ஆகியவற்றிலும் பார்க்க நிருத்த தானமே இறைவனுக்கு சிறந்தது என விஸ்ணு புராணம் கூறுகின்றது. காளிதாசர் “நாட்டியம் தேவர்களுக்கு மிக விருப்பமான வேள்வியாகும்“ எனக் கூறுகின்றார். உமாதேவியுடன் அர்த்த நாரீஸ்வரராக விளங்கும் சிவபெருமான் தாண்டவம், லாஸ்யம் ஆகிய இரு வகை நடனங்களை ஆக்கியுள்ளார். முக்குணங்களின் அடிப்படையிலான செயல்கள் பாவங்கள் யாவும் இவற்றின் மூலம் அபிநயம் செய்யப்படும். “பல்வேறு கலைச் சுவையுள்ள உணர்வுகளை உள்ளடக்கி தன்னிலையில் சற்றும் தாளாமல் மக்கள் அனைவருக்கும் இன்பம் தரவல்ல அற்புதத் திறன் கொண்டது பரத நாட்டியமே என பெருமைப்பட்டுக் கொள்வோம்!

# கீரிமலை... ஒரு பார்வை...

**ஒய்வு நிலை அதிபரும், அகில இலங்கை ரீதியிலான சமாதான நீதவானுமான, கலாகேசரி கனக மகேந்திரன் அவர்கள் கீரிமலையில் பிறந்து வளர்ந்து நாடக உலகில் தனி முத்திரை பதித்து 'கீரிமலையான்' என பரவலாக அறியப்படுபவர். எமது அழைப்பை ஏற்று கீரிமலை பற்றிய ஒரு பார்வை எனும் இத்தொடரை முற்றம் வாசகர்களுக்கு தருகிறார்.**

எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி இருந்த மண். அவர் முந்தையர் ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்து மடிந்த மண், அந்த மண்ணை சூழ்ந்து சுட்டெரித்த வன்கொடுமைத் தீயினாலும் தேசம் சுடுகாடாய் மாறியதாலும், எம்மவர் உடல்கள் சிதைந்து தெருப் பிணங்களாய் சிதறிக் கிடந்தது கண்டு, எங்கள் மண்ணின் சொந்தக் காற்றே கோரப் புயலாய் மாறி எம்மை



ஓடஓடத் துரத்தியது.

எங்கள் பிந்திய சந்ததியின் அடி கூட அநியாயங்கள் மலிந்த அந்த மண்ணில் இருந்து அந்நியப்பட்டு திசைமாறிப்போயின, நாங்கள் நேசித்து நேசித்து வாழ்ந்த வளர்ந்த எங்கள் மண்ணில் ஆழப்போட்ட அத்திவாரங்கள் கூட அழிக்கப்பட்டு விட்டன. இன்று ஆறக்கூட நிழலில்லை எங்கிருந்தோ வந்தவரெல்லாம் இப்போ எங்கள் ஊருக்கு உரிமைகோருகிறார்கள். நாங்கள் இடம் பெயர்ந்தவர்கள். நாங்கள் புலம் பெயர்ந்தவர்கள். இது எங்கள் முதுகில் குத்தப்பட்ட முத்திரை எங்கள் நெஞ்சம் அனலாய் கொதிக்கிறது.

தென்னாசிய பிராந்தியத்திலே அமைந்துள்ள பாரததேசத்தின் தென்திசையிலே பாக்குநீரிணையால் பிரிக்கப்பட்டிருப்பதே இலங்கை என்று அழைக்கப்படும் இன்றைய ஸ்ரீலங்கா. அது இயற்கை வளங்களும் இயற்கை அழகும் நிறைந்த தேமதுரத் திருநாடு. பாரிலுள்ளோர் எல்லாம் பார்த்துப் பரவசப்படும் சின்னஞ்சிறிய அழகிய நாடு இங்கே மண்வளம், மலைவளம், கடல்வளம், வனவளம், நீர்வளம் எனும் இயற்கை வளங்களுடன் இன்னும் பல வளங்கள் நிறைந்துள்ளன.

உலகில் உள்ள அனைத்து நாடுகளதும் வர்த்தக மையப்பகுதியில் இந்த நாடு அமைந்திருப்பதால் அனைத்து நாடுகளதும் அவதானத்திற்குரிய கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த நாடாக இந்த நாடு அமைந்தள்ளது. அதனாலேயே ஐரோப்பிய நாடுகள் இந்த நாட்டை ஆக்கிரமிக்கவும். வர்த்தக நோக்கங்களுக்காக இங்கு வந்த இஸ்லாமியர்கள் நிரந்தரமாக இங்கு குடியேறவும் முடிந்தது.

பதினைந்தாம் நூற்றாண்டிற்கு முற்பட்ட காலப்பகுதியில் இந்த நாடு கண்டி, கோட்டை, யாழ்ப்பாணம் என்னும் மூன்று இராட்சியங்களாக இருந்தது. அவை மூன்றும் தமிழ் மன்னர்களின் ஆளுகைக்குள்ளும் இருந்திருக்கின்றன. யாழ்ப்பாண இராட்சியத்தின் கீழ் தமிழ்மக்களே செறிந்து வாழ்ந்திருக்கின்றார்கள். ஐரோப்பியர்கள் நாட்டைக் கைப்பற்றிய பின் தமது குறிக்கோளை இலகுவில் அடைவதற்காகவும் தமது நிர்வாகத்தைப் பலப்படுத்துவதற்காகவும் மூன்று இராட்சியங்களையும் 1831ல் ஒன்றிணைத்து ஒரே நிர்வாகத்தின் கீழ் கொண்டுவந்தனர். மக்களையும் ஒன்றுபட விடாது இன ரீதியாகவும், மத ரீதியாகவும், பிரதேச ரீதியாகவும் அவர்களுக்குள் குரோதங்களை வளர்த்து பிரித்தாளும் உபாயங்களைக் கையாண்டனர். அவர்கள் நாட்டை விட்டுவெளியேறும் போது தாம் உருவாக்கிய ஒன்றுபட்ட இராட்சியத்தை அப்படியே சிங்கள பெரும்பான்மையினர் வசம் கையளித்துவிட்டு சென்றனர். அன்று அவர்கள் கொளுத்திய தீ இன்றும் கொழுந்து விட்டு எரிகிறது. நாட்டின் ஆட்சி அதிகாரங்களைக் கைப்பற்றுவதற்காக மாறிமாறி ஆட்சிக்கு வந்த பெரும்பான்மை இனத்தைச் சேர்ந்த சிங்கள அரசியல் வாதிகள் வகுப்பு வாதம் இனவாதத்தை வளர்த்நு வந்ததனால் நாடு இனவாதத்தில் சிக்கி இன்று அழிந்து கொண்டிருக்கின்றது. தமிழ் மக்கள் செறிந்து வாழும் பிரதேசங்களை திட்டமிட்டு குடியேற்றத்திட்டங்கள் மூலம் நிலங்கள் துண்டாடப்பட்டு அப்பிரதேசங்களுக்கு சொந்தமில்லாத சிங்கள மக்களை குடியேற்றி வருவதுடன் சிறுபான்மையினராக்கப்பட்ட தமிழ் மக்களின் இறைமையுடன் கல்வி கலை கலாச்சார சமய பொருளாதாரப் பாரம்பரியங்களையும் சீரழித்து வருகின்றனர். இதன் விளைவாக நாடு வன்முறைச் சூழலுக்கு உள்ளாகி, இனக்கலவரங்கள் காலத்திற்கு காலம் வெடித்து, நாடே யுத்தக்களரியாகமாறியது. இதன் தாக்கத்தையே நாம் இன்று அனுபவித்துக் கொண்டிருக்கின்றோம். சிங்கப்பூர்போல சிறக்க வேண்டிய நாடு இன்று சிதைந்து சீரழிகின்றது.

இந்த நாடு இப்போது ஒன்பது மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டு நிர்வகிக்கப்படுகிறது. வடமாகாணம், கிழக்குமாகாணம், மேல்மாகாணம், மத்தியமாகாணம், வடமேல்மாகாணம், வடமத்தியமாகாணம், தென்மாகாணம், சப்றகமுவமாகாணம், ஊவாமாகாணம், இதில் வடக்கு கிழக்கு மாகாணத்தில் தமிழ் மக்கள் பூர்வீகக்குடிகளாக செறிந்து வாழ்ந்து வருகின்றனர். மத்திய மாகாணத்தில் மலையக தோட்டதொழிலில் ஈடுபடுத்துவதற்காக இந்தியாவிலிருந்து ஐரோப்பியர்களால் குடியமர்த்தப்பட்ட தமிழ் மக்கள் செறிந்து வாழ்கின்றார்கள். மேல்மாகாணத்தில் கணிசமான அளவிலும் ஏனைய மாகாணங்களில் தொட்டம் தொட்டமாகவும் வாழும் தமிழ் மக்கள் ஏனைய இனத்தவர்களுடன் இணைந்து பிட்டும் தேங்காய்ப்பூவும் போல செறிந்து வாழ்கிறார்கள். வடமத்திய மாகாணத்தில் காலத்திற்கு காலம் இனக்கலவரங்களால் பூர்வீகமாக வாழ்ந்த மக்கள் அங்கிருந்து துரத்தப்பட்டு விட்டனர். இன்று ஒன்பது மாகாணங்களில் சைவத் தமிழ் மக்களின் பூர்வீகம் சிதையாது தனித்துவம் பேணும் வகையில் தொடர்ந்து கொண்டிருந்த




மாகாணங்கள் வடக்கும் கிழக்குமாகும். இதில் தீவிர அடாவடித்தனங்கள் மூலம் கிழக்குமாகாணம் வேகமாக பறிபட்டுக் கொண்டிருக்கின்றது. இன்னும் தன் அடையாளத்தை இழக்காது சவால்களைச் சந்தித்துக் கொண்டிருப்பது வடமாகாணம் மட்டுமே. இதில் வவுனியா, மன்னார், முல்லைத்தீவு, கிளிநொச்சி, யாழ்ப்பாணம் ஆகிய மாவட்டங்களை தன்னகத்தே கொண்டதே வடமாகாணம்.

இதுவரை கீரிமலையை விட்டு கொஞ்சம் வெளிஉலா செய்திருந்தேன். நித்தம் வாடிப்போன நம் மக்கள் முகங்களை பார்த்துக்கொண்டும், சோகச் செய்திகளோடு புலரும் பொழுதுகளை பகல் என்று பொய்யாக ஏற்றுக்கொண்டும், வாழ்வதால் மண்ணின் அவலங்களை ஒருபுறம் தள்ளி வைத்துவிட்டு ஒரு குறிப்பிட்ட விடயத்தை மட்டும் என்னால் எழுத முடியவில்லை அதனால் தான் முதலில் பட்டதும், சுட்டதும் வலிப்போடு எழுதினேன் இனி கீரிமலைக்கு வருகிறேன்.

யாழ்ப்பாண மாவட்டம் பத்து தேர்தல் தொகுதிகளைக் கொண்டுள்ளது. இவற்றுள் துறைமுகத்தை தன்னகத்தே கொண்ட கரையோரத் தொகுதியே காங்கேசன்துறை. யாழ்மாவட்ட செயலகத்தின் நிர்வாகப்பிரிவில் அடங்கிய பிரதேச செயலகங்களில் வலிகாமம் வடக்கு பிரதேச செயலகம். இப்பிரிவின் இயற்கை வளங்கள் நிறைந்த வனப்பு மிக்க கரையோரக் கிராமமே கீரிமலை எனப்படும்

சைவமும் தமிழும் தவழும் ஈழத்தின் ஐந்து பெரும் ஈஸ்வரங்களில் ஒன்றான நகுலேஸ்வரம் என்றபெயராலும் இக்கிராமம் வழங்கப்பட்டு வருகின்றது. ஒரு கிராமத்தின் சிறப்புக்கள், அதன் கேந்திர முக்கியத்துவம், வரலாற்றுச் சிறப்புக்களைத் தெரிந்து கொள்ள வேண்டும் எனில் அதன் அமைவிடம் ,சூழல், வாழும்மக்கள், அவர்களின் சமய கல்வி கலை கலாச்சார பண்பாட்டு கோலங்கள், தொழில் முயற்சிகள் அங்குவாழும் சமூகங்களின் இணைப்பு, அவர்களுக்கிடையே நிலவும் அந்நியோன்னிய உறவுகள், அவர்களின் பொதுமுயற்சிகள், அபிவிருத்திச் செயற்பாடுகள், முரண்பாடுகள் முக்கிய வருவாய் போன்ற பல்வேறு தகவல்களைத் திரட்டித் தொகுத்துப் பார்க்க வேண்டும்.

விடுமுறை கழிக்கும் சுற்றுலா மையம், பாவங் கரைக்கும் புண்ணிய தீர்த்தம், நித்திலங் கொழிக்கும் கடலின் பெருமை இத்தனைக்கும் மேலாக கீரிமலை என்ற ஒரு கிராமம் எப்படி அகில இலங்கை முற்றும் அறியப்படும் சிறப்பை பெற்றது என்பதையும், இதுபோன்ற நிதர்சன உண்மைகளே அடுத்த சந்ததிக்கு நாம் தேடிக் கொடுக்கும் வழிகாட்டும் ஆவணப்பதிவுகளாக அமையும்.

அடுத்து வரும் தொடர்கள் மூலம் முற்றத்தில் இவற்றைப் பதிவுசெய்து நாம் வாழும்காலப் பதிவுகளை பதியம் போடும் என்கடன் முடித்த திருப்தி கொள்வேன். மற்றொரு முற்றத்தில் சந்திப்போம் சிந்திப்போம்.





# எழுதாத பக்கங்கள்!

**"மாஸ்டர் வந்திருக்கிறார்", "அதிபர் பேசப் போகிறார்" இப்படி யாராவது சொன்னால் அது யாரென்று எவரும் திருப்பிக் கேட்க மாட்டார்கள். அந்த வார்த்தைகளை சுவீகரித்துக்கொண்டு தமிழர்கள் நெஞ்சமெல்லாம் நிறைந்திருப்பவர் எங்கள் அறிஞர் திரு.பொ,கனகசபாபதி அவர்கள். எமது முற்றத்தில் முதல் முத்திரை ஒட்டி முகவரிதந்து ஆசீர்வதிப்பதுபோல் அதிபர் தம் வாழ்க்கைப் பாதைத் தடம் இங்கே பதிவு செய்யப்படுவதை முற்றம் பேருவகையோடு வரவேற்கிறது.**

வளர்ச்சிப் பருவத்திலே ஒவ்வொருத்தர் உள்ளத்திலேயும் பல ஆசைகள் தொடராக தோன்றுவதுண்டு. இதில் முக்கியமானது தான் வளர்ந்ததும் செய்யவுள்ள தொழில் பற்றியது. இதற்கு ஊட்டமாக அமைவது அவரவர் வாழ்க்கையில் சந்திக்கின்ற நபர்கள். அவர்கள் பெற்றோராயிருக்கலாம், அயலவர் உறவினராக அமையலாம் அல்லது ஆசிரியராகவும் கூட அமையலாம். அவரிலே தென்படுகின்ற ஏதோ ஒன்று இவருக்கு பெரிதாகப் படலாம். எனவே அவரே இவரது வாழ்க்கைக்கு முன் மாதிரியாக அமைகிறார்.

சிறாப்பர் பள்ளிக்கூடமென ஊரவர்கள் அதன் ஸ்தாபகரைக் கௌரவிக்கு முகமாக அழைக்கின்ற சண்டிலிப்பாய் வடக்கு தமிழ்க் கலவன் பாடசாலையே எனது கல்விக்கு வித்திட்ட ஆரம்பப் பாடசாலை. கதிரவேலுச்சிறாப்பர் யாழ்ப்பாணக் கச்சேரியில் வேலை பார்த்தவர். எனவே அவரது வதிவிடம் யாழ்ப்பாண நகரம். ஆனால் இடையிடையே தனது பூர்வீகமான சண்டிலிப்பாயுக்கு குதிரை வண்டியில் வருவதுண்டாம். அப்போது சண்டிலிப்பாயில் முறைசார் பாடசாலைகள் இருந்ததில்லை. மாகியப்பிட்டியில் உள்ள சந்தையில் ஒருவர் திண்ணைப் பாடசாலை நடத்தி வந்தாராம். அக்காலத்தில் இரட்டையப்புல வைரவர் ஆலயத்தில் வள்வி நடைபெறுவதுண்டு. சிறாப்பர் ள் இந்த உயிர்ப் பலியினை த்த வேண்டும் என்ற ஆவல் ாண்டார். கிடாய் வெட்டுதலை ந்னால் ஊரவர்களுக்காகத் ான் ஒரு பாடசாலையை அமைத்துத் தருவதாக வாக்களித்தார். ஊரவர்களும் மனம் மாறினார்கள். வேள்வியை நிறுத்தி விட்டார்கள். சிறாப்பர் சொன்ன சொல்லைக் காப்பாற்ற ஒரு பாடசாலையை ஆக்கிக் கொடுத்தார். சண்டிலிப்பாய் கல்விக்காகக் உயிர்ப் பலியினைத் தானம் செய்தமைக்காகவும், சிறாப்பர் கிடாய் வெட்டுதலை கல்விக் கண்திறக்க மாற்றாகக் கையாண்டதாலும் சரித்திரத்தில் இடம் பெறுகிறது. இது நடந்தது 110 வருடங்களுக்கு முன்னால். நான் அந்தப் பாடசாலையில் அரிவரி வகுப்பினில் கல்வி பயிலச் சென்றது 1940 ஆம் ஆண்டினில். அப்பாடசாலையில் அப்போது தலைமை ஆசிரியராக விளங்கியவர் நல்லதம்பி. அவர் சங்கானை வாசி. பாடசாலைக்கும் அவர் வசித்த இல்லத்துக்குமிடையே இரண்டு மைல் தூரம் இருக்கும். அக்காலத்தில் சண்டிலிப்பாயுக்கூடாக பேருந்து ஓடவில்லை. ஆகவே அவர் நடந்தே வருவார். நல்லதம்பி அவர்கள், ஆள் உயரம் குறைவுதான் ஆனால் அகலம் அதற்கு ஈடுகட்டியது.

நேரான வீதி . அவர் குடையை விரித்தபடி ஆடிஆடி வருவதை பாடசாலைக்கு வெளியே நின்று விளையாடிக் கொண்டிருக்கும் மாணவர்கள் வெகு இலகுவாகக் கண்டு கொள்வார்கள். 'வாறான்ரா' என வைதபடியே பாடசாலை உள்ளே ஓடிச் சென்று அமைதியாக இருப்பார்கள். காரணம் அவரது அடி அத்தனை பிரபலம். பாடசாலையின் பிற்புற எல்லயாக கம்பி அடித்த வேலியின் பூவரசமரங்கள் ஓங்கி வளர்ந்திருந்தன. ஒவ்வொரு நாளும் அதன் மெல்லிய கதியால் தலைமை வாத்தியாரின் கைகளில் களி நடம் புரியும். அரிவரியில் இருந்த எனக்கு இரவு நேரங்களில் கைத்தடியுடன் அவர் காட்சி தருவார் கனவுகளில். ஆகவே பாடசாலை என்றதுமே ஒரு வெறுப்பு ஏற்பட்டது. ஆகவே அக்காவுடன் பாடசாலை செல்லும் நான் இடைவழியில் ஏதேனும் சாக்குச் சொல்லி விட்டு வீட்டுக்கு ஓடி வந்து விடுவேன். ஆனால் எனது இந்த ஏமாற்று வித்தை நீண்ட நாட்கள் நிலைக்கவில்லை. ஒரு நாள் நான்



அக்காவுக்குச் சாக்குச் சொல்லிவிட்டு உல்லாசமாகப் பாடியபடி வீட்டுக்கு வந்து கொண்டிருக்கையில் எனது அண்ணர் வைரவகோவிலின் ஆலமரத்துக்குள் மறைந்து நின்றவர் பூவரசங்கதியால் ஒன்றுடன் பிரசன்னமானார். ஆகவே அவர் சவாரி மாட்டினுக்கு போடுவது போலப் போட்டு என்னைப் பாடசாலையில் விட்டு விட்டே போனார். தலைமை வாத்தியாரின் அடி பரவாயில்லை என உணர வைத்தது. அதற்குப் பின் நான் ஒழுங்காகப் பாடசாலை போனேன். ஆனால் அதற்குப் பின் என் மனதில் ஒரு மாற்றம். நானும் ஒரு பாடசாலைத் தலைமை ஆசிரியராக வரவேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. அதனை உடனடியாகவே செயற்படுத்த ஆரம்பித்தேன். எமது வளவின் பிற்புறத்தில் பல பனை மரங்கள் இருந்தன. வேலியில் பூவரசு கிளைகளுடன் காட்சி தந்தது. எனது முதல் மாணவர்கள் இந்தப் பனை மரங்களே. அவர்களைக் கேள்வி கேட்டுவிட்டு பூவரசம் கதியால் சவுக்காக மாறும் வரை பனைமரங்களுக்கு எனது இம்சை நாளாந்த நிகழ்ச்சி.

சிறாப்பர் பாடசாலையில் மூன்றாந்தரம் படித்து முடித்ததும், நான் ஆங்கிலக் கல்வி கற்க வேண்டும் என்ற பெற்றோர்களின் எண்ணப் படி இராசா ஆங்கிலப் பாடசாலை என அழைக்கப்பட்ட சண்டிலிப்பாய் இந்து ஆங்கிலப் பாடசாலையில் Low first Year வகுப்பினில் சேர்ந்தேன். அங்கே அப்போது அதிபராக விளங்கியவர் திரு. தில்லையம்பலம். யாழ்ப்பாணத்திலிருந்து பேருந்தில் வருவார். நல்ல உயரம். கருமையான நிறம். அடர்த்தியான தலைமயிர். பரமாஸ் வேட்டி சால்லையுடன் நாசனல் போட்டு வருவார். அவர் பேசுகின்ற போதோ . படிப்பிக்கின்ற பொழுதோ முழுமையாக ஒரு மொழியில் இருப்பதில்லை. ஆங்கிலமும் தமிழும் கலந்த படி தான் இருக்கும். இவர் அடிக்கின்ற அடி நல்லதம்பி ஆசிரியர் சாதாரணம் எனக் கூறுமளவாக்கி விட்டது. போதாக் குறைக்கு அசெம்பிளியில் பகிரங்க அடியினையும் (Public Caning) இடையிடையே தாராளமாகக் கையாள்வார்.

மொத்தத்தில் பாடசாலையில் அதிபராக இருந்தால் தடியினைத் தாராளமாகப் பாவிக்கலாம் என்ற உணர்வு என் உள்ளத்தில் ஸ்திரம் பெற்று விட்டது. ஆனால் அப்பாடசாலையில் எனது உள்ளத்தில் ஆசிரிய ஆசையை ஏற்படுத்தியவர் திரு. நாகரத்தினம் அவர்களே. மிகவும் திறமையாக கற்பிப்பார். அவரது கற்பித்தல் முறை என்னைக் கவர்ந்தமையால் நான் அவரைப் போன்று செயற்பட முனைந்தேன். தினசரி காலை வேளையில் தலையில் குளித்து விடுவதுடன் நெற்றியில் சந்தனப் பொட்டும் இட்டபடியே பாடசாலை செல்வேன். ஆனால் அவர்மேல் இருந்து மையல் நீங்குதற்கான ஒரு சந்தர்ப்பம் எழுந்தது. நான் Lower first year இல் இருந்து First year க்கு வகுப்பேற்றப் பட்டேன். மிகவும் திறமையாக அந்த வகுப்பினில் செயற்பட்டமையால் அவ்வருடம் முடிந்ததும் வழமையான second year விட்டு ஐந்தாந்தரத்துக்கு எனக்கு double promotion தந்தார்கள். அங்கே எனக்கு அருகில் உட்கார்ந்திருந்தவன் பஞ்சாட்சரம். கொஞ்சம் இடக்கு முடக்காகப் பேசக் கூடியவன். எமது வகுப்பினில் நாகரத்தினம் ஆசிரியர் பாடம் நடத்திக் கொண்டிருந்த போது முன் வரிசையில் உட்கார்ந்திருந்த ஒரு பெண் பூப்பெய்திவிட்டாள். ஆசிரியர் ஒரு சீட்டு எழுதிக் கொடுத்து அவளை அலுவலகம் அனுப்பியிருந்தார். பஞ்சாட்சரம் அதனைச் சற்றுக் கொச்சையாகச் சொல்லிச் சிரித்தான். எனக்கும் சிரிப்பு வந்தது. சிரித்து விட்டேன். ஆசிரியருக்குக் கோபம் வந்தது. அவனை அழைத்து பிரம்பால் நன்றாக வாங்கினார் . அவன் ஒவ்வொரு அடியும் வாங்கும் போது அவனது உடலசைவு கோணங்கித் தனமாக இருந்தது. என்னைச் சிரிக்க வைத்தது. ஆசிரியருக்கோ நான் அவன் சொன்னதை நினைத்துச் சிரிப்பதாக எண்ணி என்னை அழைத்துச் செம அடி. ஏறக்குறைய 30 அடி அடித்து விட்டார். என் மனதிலிருந்து அடி எடுத்து வைத்து வெளியறினார்.பின் என்ன சந்தனப் பொட்டையும் விட்டேன். தினசரி . தலையில் தோய்வதையும் விட்டேன்.

சண்டிலிப்பாய் வாசிகளுக்கு மிகப் பெரிய ஒரு பாடசாலையாக கண்களுக்குத் தெரிவது கந்தரோடையில் அமைந்த ஸ்கந்தவரோதாயாக் கல்லூரியே. ஆகவே நம் பல்லோரதும் கனவுப் பாடசாலையாக அமைந்தது அக் கல்லூரியே. எனவே சண்டிலிப்பாய் ஆங்கிலப் பாடசாலையில் ஏழாம் தரம் முடித்தபின்னர் ஸ்கந்தவரோதயாவில் எட்டாம் தரத்தினில் சேர்வதற்கு விண்ணப்பித்தேன். ஓரேற்றர் சுப்பிரமணியம் தான் அப்பாடசாலையின் அதிபராக விளங்கினார். ஸ்கந்தாவில் சேர்வதற்குப் பிரவேசப் பரீட்சை ஒன்று வைத்தார்கள். ஆங்கிலத்தில் தான் கட்டுரை ஒன்றினை எழுதுமாறு பணித்தார்கள். பரிதாபமாக எழுதினேன். அவரே அலுவலக அறையுள் எம்மை அழைத்து எம்முன்னாலேயே நாம் விட்ட பிழைகளைக் கூறி கட்டுரையினைத் திருத்தினார். அவரது நடவடிக்கைகள் அவர்மேல் ஒரு அபிமானத்தினை ஏற்படுத்தின. எட்டாந்தரம் A பிரிவினில் என்னை அனுமதித்தார். கையில் பிரம்புடன் திரிவார். முந்திய இரண்டு அதிபர்கள் போல இவர் பிரம்பினை உபயோகித்ததை நான் பெரிதாகக்காணவில்லை. ஆனால் போகின்ற வருகின்ற போது வழியில் அகப்படுபவர்களைப் பிரம்பினால் தடவிக் கொடுக்கும் அதீதத் தன்மையைக் காணமுடிந்தது. ஆகவே அவர் வரும் பாதையை விலகிச் செல்வது உசிதமாக இருந்தது. அங்கே எனக்குக் கணிதம் போதித்தவர் திரு. சிவகுமாரன் அவர்கள். என் உள்ளத்திலே

இடம் பிடித்திருந்தவர்கள் அத்தனை பேர்களையும் இவர் பிரதியீட்டி விட்டார். நெடிய உருவம், வாரிவிடப்பட்ட தலை என்றுமே வெள்ளை வேட்டி, நாசனல் , சேர்ட்டுடன் உத்தரியம் மடித்த சால்வையோடு காட்சி தரும் சிவகுமாரனின் கனிவான பேச்சும் நகைச் சுவை ததும்பக் கற்பிக்கும் பாணியும் என்னை மிகவும் கவர்ந்தது. கணிதம் கற்பிக்கையில் அவர் எடுக்கிற கவனம் மாணவர்மேல் அவருக்குரிந்த அக்கறையைப் புலப் படுத்தியமை என் அபிமானத்தை அவர் பெற்றதில் வியப்பில்லை.

நான் சிரேஸ்ட மாணவர் தராதரப்பத்திரப் பரீட்சையில் (S.S.C) சித்தியெய்திவிட்டேன். எனது அண்ணையின் எதிர்பார்ப்பு ஈடு செய்யப் படவில்லை என்பதில் அண்ணருக்குச் சற்று மனவருத்தம். ஆனால் ஓறேற்றர் பரீட்சை முடிவுற்றதுமே எம்மில் பத்து மாணவர்களைத் தேர்ந்து எடுத்து உயர்தர பல்கலைக்கழகம் புகுவதற்கான வகுப்பினில் வைத்துப் பாடம் புகட்ட ஆரம்பித்து விட்டார். இந்தப் பதின்மரில் இருவர் தவிர ஏனையோர் சித்தயெய்தி விட்டோம். அதில் மூவர் மிக நல்ல பெறுபேறுகள் பெற்றிருந்தனர். எனது அண்ணருக்கு இதில் நான் நான்காவதாக வரவில்லை என்ற ஆதங்கம். அடுத்து நான் என்ன செய்யவுள்ளதாக அண்ணர் கேட்டார். எங்கள் உறவினர்கள் பெரும்பாலோர் விவசாயிகள். ஒரு சிலர் வியாபாரிகள், இன்னும் சிலர் மலேசியாவில் உத்தியோகம் பார்த்து ஓய்வில் வந்தவர்கள். ஒருவர் மாத்திரம் நிலஅளவையாளராகச் சேவகம் செய்து கொண்டிருந்தார். அவர் எமது இல்லத்துக்கு வரும்போது காரில் வருவார் ஆகவே எனக்கு அந்த வேலையில் ஒரு மோகம். நில அளவையாளராக வேலை பார்த்தால் என்ன அண்ணை என்றேன். ‘எடே விசரா அது காடு மேடெல்லாம் போக வேண்டிய வேலை. அது வேண்டாம்’ என முற்றாகவே நிராகரித்து விட்டார். அப்போ அடுத்தது? டாக்டருக்குப் படியேன் என அண்ணா கேட்டார். எனக்கோ அந்தப் பௌதிகவியல் என்ற பாடத்தை நினைத்தாலே வயிற்றைக் கலக்கியது. முதல் தவணைப் பரீட்சையில் இரசாயனவியலில் நான் வகுப்பில் முதலாவதாக நின்றேன். தாவரவியல், விலங்கியல் ஆகிய பாடங்களிலும் மிகவும் சிறப்பாகச் செய்தேன். பௌதிகவியல் பரீட்சையை எடுக்காமல் வீட்டிற்கு ஓடி விட்டேன். பௌதிகவியல் ஆசிரியர் திரு துரைராசா அவர்கள் அதற்காக ஒரு ரூபாய் தண்டம் விதித்ததுடன், இப்படியென்றால் நீ பல்கலைக்கழகம் புகமாட்டாய் என ஆசீர்வதித்தும் விட்டார். ஆகவே அண்ணரிடம் அது எட்டாக் கனியென்றேன். அண்ணர் இப்பொழுது ஆசிரியராகக் கடமையாற்றுகிறார். அடுத்து என்ன ஆசிரியத் தொழில் தான். எனது சித்தப்பாவின் மகன் இந்தியாவில் பட்டம் பெற்று உரும்பராயில் ஆசிரியத் தொழில் பார்த்துக் கொண்டிருந்தார். அவர்கள் என் வீட்டிற்கு வந்தார்கள். நல்ல பெறுபேறுகள் பெற்றுள்ளாய் உடனடியாக இந்தியாவிற்குச் சென்று பட்டதாரியாகிவா என்றார்கள். மறு பேச்சில்லாமல் அண்ணர் என்னை இந்தியாவிற்கு விமானம் ஏற்றி விட்டார்கள்.

சென்னையில், சென்னைக் கிறிஸ்தவக் கல்லூரியில் 1954முதல் 1957 வரை கல்வி கற்ற மூன்று வருடங்கள் என் வாழ்வில் மறக்க முடியாத வருடங்கள். விலங்கியல் Honours வகுப்பினில் கற்றேன். எமது வகுப்பிலே ஆறே ஆறு மாணவர்கள். இத்துறையினுக்கு அங்கீகாரம் பெற்ற கல்லூரிகளில் இக்கல்லூரியைத் தவிர சென்னை இராசதானிக் கல்லூரி மாத்திரமே. எனக்கு தாவரவியல் honours செய்யவே ஆசையிருந்தது. இந்தத் துறை சென்னை இராசதானிக் கல்லூரியில் மாத்திரமே இருந்தது. அங்கு சேர்வதற்கான ஆயத்தங்களுடன் தான் நான் சென்னை சென்றேன். ஆனால் எனது ஆப்த நண்பன் கிறிஸ்துவக் கல்லூரியில் ஆங்கில இலக்கியத்தில் Honours செய்வதற்கு இடமெடுத்து விட்டான். ஆகவே அவனோடு தொடர்ந்தும் இருப்போமே என்ற எண்ணத்தால் நான் விலங்கியல் பாட நெறி கற்பதுடன் நின்று விட்டேன். ஆனால் அப்பாட நெறியில் எனக்கு மிக்க ஈர்ப்பு ஏற்பட்டமையால், தொடக்கம் முதலே சிறந்த மாணவனாக மிளிர்ந்தேன். இறுதிப் பரீட்சையிலும் மாகாணத்திலேயே முதல் மாணவனாகத் தேறி Caithness Gold Medal லினைப் பெற்றேன்.

இத்துறையிலே கற்பதற்கு எனக்கு அபிரிமிதமான ஆர்வத்தினை ஏற்படுத்தியவர் அங்கே விரிவுரையாளராக விளங்கிய கலாநிதி சஞ்சீவராஜ் அவர்கள். தூய வெள்ளாடையில் வருவார். நேரத்திற்கு ஒரு மணித்துளி கூடப் பிந்தாமல் வருவார். நேரம் முடிந்ததும் மறு பேச்சில்லாமல் வெளியேறி விடுவார். ஒரு குறிப்புக் கூட வகுப்பினுக்கு எடுத்து வருவதில்லை. மனப்பாடம் செய்தது போன்று அத்தனை விபரங்களையும் ஒப்படைப்பார். அற்புதமான ஆசிரியர். அவர் எப்படி நேரம் தவறாமல் வருவாரோ அப்படியே மாணவர்களும் நேரம் கடைப்பிடிக்க வேண்டும் என்பதில் அவர் கறாராக இருப்பார். ஒரு சமயம் காலை 7:00 மணிக்கு செய்முறை வகுப்பு. நாம் போய்க் கொண்டிருந்தோம். வழியில் அவர் வந்தார். எம்முடன் பேசிக் கொண்டு போனார். அவரை ஆய்கூடத்தினுள் செல்வதற்கு விட்டு விட்டு நாம் வெளியே சற்று மினைக் கெட்டு விட்டோம். வகுப்பினுள்ளே புகுந்தோம். வெளியே போங்கள் என்ற உத்தரவு வந்தது. நாம் வகுப்புக்குப் பிந்தி விட்டோம்.

அவர் குணாதிசயம். அவர் கற்பித்தல் முறை. அவர் உடை. எல்லாமே எனக்குப் பிடித்திருந்தது. என் உள்ளம் நிறை ஆசிரியராகிவிட்டார்.

இன்னும் எழுத இருக்கு....

# சிட்னியில் நூல் அறிமுக விழா

அறிவியல் தகவல்களையும் சரித்திரப் பதிவுகளையும் இலக்கியமாய்க் குழைத்தெடுத்துத் தமிழில் படைக்கப்பட்டிருக்கும் இரண்டு தமிழ் நூல்களின் அறிமுக விழா மார்ச் மாதம் பதினாறாம் திகதியன்று சிட்னியில் நடைபெற்றது. முன்னைநாள் மகாஜனக் கல்லூரி அதிபரும் தற்போது கனடாவில் வதிபவருமான திரு பொ. கனகசபாபதி அவர்கள் எழுதிய “எம்மை வாழ வைத்தவர்கள்” மற்றும் “மரம் மாந்தர் மிருகம்” என்ற நூல்களின் அறிமுகம் தெல்லிப்பழை மகாஜனக் கல்லூரி பழைய மாணவர் சங்கத்தின் நியூ சவுத் வேல்ஸ் -அவுஸ்திரேலியத் தலைநகர் பிராந்தியக் கிளையினரால் ஹோம்புஷ் ஆண்கள் உயர்தரப் பாடசாலையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

நூல் அறிமுக நிகழ்ச்சிக்கு பழைய மாணவர் சங்கத்தின்செயலாளரான கலாநிதி பாலா விக்னேஸ்வரன் தலைமை தாங்கினார். நியூ சவுத் வேல்ஸ் தமிழ்ப் பாடசாலைகளின் கூட்டமைப்பின் பாடநூலாக்கக் குழுவின் தலைவரும் ஹோம்புஷ் தமிழ்க்கல்வி நிலையத்தின் அதிபரும் சிறந்த மேடைப் பேச்சாளருமான தமிழ் அறிஞர் திரு. தி. திருநந்தகுமார் அவர்களும் நாள் ஆசிரியையும் வலயக் கல்வி அதிகாரியும் தமது மேடை நாடகங்களுக்காகவும் நூல்களுக்காகவும் பல பரிசுகளை வென்றவருமான சாகித்திய மண்டல விருது பெற்ற திருமதி கோகிலா மகேந்திரன் அவர்களும் இந்த நூல்களை அறிமுகம் செய்து பேசினார்கள்.

“மரம் மாந்தர் மிருகம்” என்ற நூலை அறிமுக செய்து பேசிய திருமதி கோகிலா மகேந்திரன், திரு. கனகசபாபதி தமது துறையான விலங்கியல் தாம் கற்ற தாவரவியல் என்பனவற்றுக்கு மேலாக, தமது கிராமத்துச் சூழலில் தாம் கண்ட விலங்குகளையும் மரங்களையும் தனித் தனியாகத் தெரிந்தெடுத்து அவை சார்ந்த நுணுக்கமான பல தகவல்களைத் திரட்டித் தந்திருப்பதைச் சுட்டிக் காட்டிப் பேசினார். நாளாந்த கிராமிய வாழ்க்கையில் காரணங்கள் ஆராயப்படாமலே மரங்கள் மற்றும் விலங்குகள் தொடர்பில் மாந்தர் கைக்கொள்ளும் விடயங்களுக்குப் பின்னால் இருக்கின்ற சூக்குமங்களை இந்நூலில் திரு கனகசபாபதி ஆய்ந்து தொகுத்திருப்பதை திருமதி கோகிலா மகேந்திரன் சிலாகித்தார். ஒரு சிக்கலான அறிவியல் கட்டுரைத் தொகுதியாக இல்லாது இலகுவான தமிழில் நடைமுறை வாழ்க்கையுடனான தொடர்புகளையும் நகைச்சுவையையும் சேர்த்து இந்தக் கட்டுரைகள் பின்னப்பட்டிருப்பதையும் சுட்டிக்காட்டி, ஒவ்வொரு கட்டுரையும் கையில் எடுத்தால் வைக்க முடியாத வாசிப்பு ஊக்கியாக இருப்பதையும் திருமதி கோகிலா மகேந்திரன் விதந்துரைத்தார்.

திரு. திருநந்தகுமார் பேசிய போது “எம்மை வாழ வைத்தவர்கள்” போன்ற ஒரு நூலின் தேவை எமக்கு மட்டுமன்றி அடுத்த தலைமுறைகளுக்கும் தான் என்று குறிப்பிட்டார். கல்வியைச் செல்வமாகக் கருதும் தமிழர்களுக்குக் கல்விக் கண் திறப்பதில் பல சவால்களுக்கு மத்தியிலும் ஒப்பற்ற பங்களித்த 23 கல்வியாளர்கள் எம்மை வாழ வைத்தவர்கள் தாம் என்று அவர் சுட்டிக்காட்டினார். ஒவ்வொரு பக்கங்களிலும் பொதிசெய்து வைக்கப்பட்டிருக்கும் தகவல்களைக் கிரகித்துப் போகும் போது மனதில் விரியும் விளக்கங்கள், கடுமையான பின்னணி ஆய்வுகளின் துணையுடன் ஒவ்வொரு



தலைப்பும் எழுதப்பட்டுள்ளமைக்குச் சான்றாக இருக்கின்றன என்றார் திரு. திருநந்தகுமார். எமது கடந்த காலம் மறக்கடிக்கப்பட்டுவிடுமோ என்று அஞ்சுகிற தமிழர்கள் தமது தனிப்பட்ட நூல் சேமிப்புகளிலும் பல நூலகங்களிலும் வைத்திருக்க வேண்டிய கல்வியாளர்கள் பற்றிய வரலாற்றுப் பதிவு ஆவணம் இது என்றும் அவர் சொன்னார்.

அவசரமான இன்றைய உலகத்தில் பின்னணி ஆராய்வுடன் தமிழில் எழுதப்படும் கட்டுரைகள் அருகிவரும் போது அதிபர் கனகசபாபதி அவர்கள் செய்திருப்பது ஒரு மெச்சத்தக்க விடயம் என்று பாலா விக்னேஸ்வரன் தனது உரையில் குறிப்பிட்டார். “சென்றிடுவீர் எட்டுத் திக்கும், கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்” என்ற பாரதி சொல் கேட்டு புகலிடத்து வடிவங்களை இணைத்து அறிவியல் இலக்கியங்களும் ஆவணப்படுத்தல்களும் அதிபர் கனகசபாபதியினால் செய்யப்படிருப்பதைச் சுட்டிகாட்டிய அவர், வெண்கட்டியும் அவ்வப்போது பிரம்பும் பிடிக்கும் அதிபர் கை இவ்வாறான ஒரு கனதியான பேனாவையும் பிடிக்கும் என்பது அதிபரது பெருமபாலான மாணவர்களுக்கு ஓர் இனிய அதிர்ச்சி தான் என்றும் சொன்னார். தக்கார் தகவிலர் என்பது அவரவர் எச்சத்தால் காணப்படும் என்பதில் அதிபரது மாணவர்களின் சாதனைகள், கல்லூரிகள் கண்ட மைல்கற்கள் என்பவற்றுடன் எழுதி வரும் நூல்களும் சேரும் என்றார் பாலா விக்னேஸ்வரன்.

இந்த நூல்களின் சிறப்புப் பிரதிகளை விழா மேடையில் மகாஜனக் கல்லூரியின் பழைய மாணவர்கள் பெற்றுக் கொண்டார்கள். மகாஜனக்கல்லூரி பழைய மாணவர் சங்கத் தலைவர் கலாநிதி பாலன் தனபாலசிங்கம் இப்பிரதிகளை அவர்களுக்கு வழங்கினார்.

நூல் அறிமுக விழாவைத் தொடர்ந்து பழையமாணவர் சங்கக் கிளையின் அடுத்த ஆண்டுக்கான பன்னிருவர் கொண்ட செயற்குழு தெரிவு நடைபெற்றது. திரு. KG பாஸ்கரன் தலைவராகத் தெரிவு செய்யப்பட்டார். இரவு உணவுடன் இந்த விழா நிறைவு பெற்றது.

April, 2nd has been designated by the U.N as World Autism Awareness Day. However, despite it's official designation the date, like much of the International days observed by the UN, often goes unnoticed by much of society. Autism does deserve more attention than it receives, largely for reasons pertaining to the fact that it is a disease that does not discriminate based on ethnicity and it's pervasiveness is unbound by borders. It is a disease that can impact anyone.

The term autism is often used to refer to a spectrum of neurological disorders aptly named autism spectrum disorders which encompasses three disorders including Aspergers syndrome, autism and pervasive developmental disorder, not otherwise specified. Its prevalence has been reported to be 1-2 per 1000 people worldwide by the Center for Disease Control and Prevention, though reported prevalence varies greatly among different countries. An overall trend has been observed with increasing prevalence in recent years. While this trend can be partly explained by better detection and diagnosis the trend remains largely unexplained.




Diagnosis of autism is a highly involved process which takes into consideration a battery of tests and input from parents, teachers, and social workers. Impaired social and communication skills are considered to be among the major overarching diagnostic criteria for autism spectrum disorders. However, the severity of symptoms is highly variable, with some individuals considered highly functional autistics may even appear to be lacking of symptoms upon initial interactions. Additionally, it has been found that many autistics display heightened visual, spatial and musical skills and talents, though this is not true for all autistic individuals.

Causes for autism have not been well established, though there have strong genetic ties associated with the diseases. Prenatal events and prenatal environment including maternal illness, and exposure to certain teratogens have also been shown to increase the chance of a child developing an autism spectrum disorder. It is important to keep in mind, however that these are not causes, but merely appear to increase the likelihood getting autism. Misconceptions behind the cause of autism include bad parenting and vaccines. These have been largely ruled out be the scientific community as autism is believed to begin its development largely during the prenatal period.

-Mathuran

# YOGA

***Satha***

*In modern times, the physical postures of yoga are used to ease problems related to health, reducing stress and making the spine flexible. Yoga can be used as a complete exercise program and physical therapy routine.*

## Poses of the Month

### Tadasana(Mountain Pose):

Practiced as a starting position for standing poses, in between standing poses or by itself to improve posture.



### Anjaneyasana(Low Lunge):



This lunge variation stretches the thighs and groin and opens the chest.

### Balasana(Child's Pose):

A restful position that can be sequenced between more challenging poses.



## பிளமிங்டன் தமிழ்க்கல்வி நிலையம் திருக்குறள் மனனப் போட்டி – 2013

சகல பிரிவினர்க்கும் திருக்குறள் போட்டியுடன் தமிழ்த்திறன் தகைமத்தேர்வு போட்டியும் நடாத்தப்பட உள்ளது. குழந்தைகளுக்கு இயன்றளவில் தமிழ் அறிவை கொடுக்கும் முகமாக பாடவிதானம் அமைக்கப்பட்டுள்ளது. விரும்பியவர்கள் யாவரும் பங்குபற்றலாம். போட்டிகளில் முதல் மூன்று இடங்களும் வயதெல்லைக்கு உட்பட்டோரே தெரிவு செய்யப்படுவார்கள். மற்றயவர்களுக்கு பரீட்சைக்கான புள்ளிகளும் சான்றிதழ்களும் வழங்கப்படும்.

**1. இளமழலை (2008க்கு பின் பிறந்தோர்)**

வாய்மொழித் தேர்வு (1 கதை - 2. பாட்டு - 3. வினாவிடை )

எழுத்துத் தேர்வு - (எழுத்துக்கள் - ட ப ம க அ ஆ டி டு ம் ப் பா மா)

**2. முதுமழலை (2007க்கு பின்)**

வாய்மொழித் தேர்வு (1. கதை - 2. பாட்டு - 3. வினாவிடை )

எழுத்துத் தேர்வு (எழுத்துக்கள்- அ ஆ இ ஈ உ எ ஐ - ட ப ம க த வ ச ர ந ல - டி பி மி ரி தி டு பு - ம் ப் க் ழ் ண் ல்.)

**3. பாலர் பிரிவு (2005–2006)** Gr. 1 & 2

வாய்மொழித் தேர்வு (1.. திருக்குறள் கடவுள்வாழ்த்து 2. பொது அறிவு வினாக்கள் )

எழுத்து தேர்வு - (உயிர்எழுத்துக்கள் - மெய் எழுத்துக்கள் - உயிர்மெய் எழுத்துக்கள் )

**4. கீழ்ப்பிரிவு: (2003–2004)** Gr. 3 & 4

அதிகாரம்(40) - கல்வி இதனோடு (1,3,10,) ஆகிய இலக்க திருக்குறள் கருத்துக்கள் கேட்கப்படும்.)

**5. மத்தியபிரிவு: (2001–2002)** Gr. 5 & 6

அதிகாரம்-(10) - )இனியவை கூறல் இதனோடு (2,5,6,9)ஆகிய இலக்க திருக்குறள் கருத்துக்கள் கேட்கப்படும்.)

**6. மேற்பிரிவு: (1999–2000)** Gr. 7 & 8

அதிகாரம் கேள்வி (42) இதனோடு (1,6,10) ஆகிய இலக்க திருக்குறள்களுக்கு கருத்துக்கள் கேட்கப்படும்.)

**7. அதிமேற்பிரிவு: (1998 & Up)** Gr. 9 & up

அதிகாரம்- (23)புகழ் இதனோடு (1,4,6,9)இஆகிய இலக்க திருக்குறள் கருத்துக்கள் கேட்கப்படும்.)

**எல்லாப் பிரிவினருக்கும் திருக்குறள் பற்றிய பொதுஅறிவு வினாக்கள் கேட்கப்படும்.**

சகல பிரிவினர்க்குமான எழுத்துத் தேர்வுக்கு பந்தி தரப்படும். பந்திக்குரிய பரீட்சை வினாக்கள், ஒத்தசொல் எதிர்ச்சொல் ஆங்கிலம் தமிழ் திணை பால் எண் இடம் காலம் என்பனவற்றைத் தழுவி அமையும். இளமழலை (2008க்கு பின் பிறந்தோர்), முதுமழலை (2007க்கு பின்), பாலர்பிரிவு (2005-2006) ஆகிய பிரிவினர்கள் பாடவிதானங்களை பாடசாலை முகவரிக்கோ, மின் அஞ்சல் முகவரிக்கோ தொடர்புகொண்டு பெற்றுக்கொள்ளலாம்.

போட்டிகள் யூன் மாதம் நடைபெறும். விண்ணப்பப் படிவங்களை மே மாதம் 31ம் திகதி முன்னதாக அனுப்பி வைக்க வேண்டும். அனுமதிக் கட்டணம்: 25 டொலர்கள்.

**விண்ணப்பங்கள் அனுப்பவேண்டிய முகவரி:**

Flemingdon Tamil Education center, 3254 St. Clair Av. East , Scarborough. ON., M1L 1V8

மேலதிக தொடர்புகளுக்கு அழையுங்கள் :- 416-669-8129.

**மின்அஞ்சல் முகவரி:** vaany_acca@hotmail.com

*முத்தமிழ் அறிவாலயம்*
*நோர்வே*

*Muthtamil Arivaalayam*
*www.muthtamil.com*

நோர்வே முத்தமிழ் அறிவாலயத்தின் 25 வது ஆண்டு நிறைவினையொட்டி நடாத்தும் மாணவர் சிறுகதைப் போட்டி.

நோர்வேயில் தமிழ் மொழிக்கல்வியில் தனது 25 வது ஆண்டை நிறைவு செய்யும் வேளையில் இலங்கை மாணவர்களது படைப்பாற்றலை ஊக்குவிக்கு முகமாக சிறுகதைப் போட்டியினை நோர்வே முத்தமிழ் அறிவாலயம் நடாத்துகிறது.

**இதற்கான முதற்பரிசு 10,000 ரூபாய்**
**இரண்டாம் பரிசு 5,000 ரூபாய்**
**மூன்றாம் பரிசு 3,000 ரூபாய்**

இதையடுத்து மேலதிகமாக தெரிவு செய்யப்படும் 5 **கதைகளுக்கு தலா 1000 ரூபாய்** விகிதம் பரிசாக வழங்கப்படும்.

**சிறுகதைப் போட்டி நிபந்தனைகள்.**

1. இலங்கைப் பாடசாலை மாணவர்கள் அனைவரும் இப்போட்டியில் பங்குபற்றலாம்.
2. கதைகள் மாணவரது கையெழுத்தில் எழுதப்பட்டு தபாலில் அனுப்பப்படவேண்டும்.
3. கதைகள் மாணவரது சொந்தப் படைப்பு என்பதைப் பாடசாலை அதிபர் கையெழுத்திட்டு உறுதிப்படுத்தவேண்டும்.
4. சிறுகதைப் பிரதியில் மாணவரது பெயர் குறிப்பிடல் தவிர்க்கப்பட வேண்டும்
5. போட்டி முடிவு வெளியிடப்படும்வரை சிறுகதைகள் எந்தவொரு ஊடகத்திலும் பிரசுரமாக்குவதை தவிர்க்கவும்,பிரசுரமான படைப்புக்கள் போட்டியிலிருந்து விலக்கப்படும்.
6. நடுவர்களது தீர்ப்பே இறுதியானது.படைப்புக்களை பின்வரும் முகவரிக்கு எதிவரும் மே 31-2013 க்கு முன்பு தபாலில் அல்லது மின் அஞ்சலுக்கு மின்னணுப்பிரதி(PDF) செய்து அனுப்பப்படல் வேண்டும்.

*தொலைபேசி இல:*
*0047 934 04 764*
*0047 926 20 542*

mtarivalayam@gmail.com

*முகவரி:*
*Herslebs gate 43*
*0578 Oslo*
*Norway*

# RECIPE of the MONTH

## Radish Paratha

*A paratha is an Indian flatbread that can be prepared stuffed(as in this case)with different sorts of vegetables or without stuffing accompanied by a variety of curried dishes. With all Indian dishes, do not be afraid to use your hands to roll and scoop.*



| **Paratha** | **Filling** |
|---|---|
| **2 cup Atta flour** | **2 cups grated radish** |
| **1/2 – 1 teaspoon onion seeds** | **1 cup radish leaves** |
| **3 tablespoons yogurt** | **1/4 teaspoon turmeric powder** |
| **1 – 2 teaspoons ghee** | **1/2 teaspoon chilli powder** |
| **Water** | **1 green chilli** |
| **Salt to taste** | **Salt to taste** |

### Directions

1. Mix flour, onion seeds, yogurt, ghee and salt together in a large bowl. Take your shredded radish and strain all the juice from it into the flour mixture. Add water a little at a time until you get dough that sticks together. Make sure not to allow the dough to become wet or slick, it should be dry. Put aside.
2. Put burner at medium heat. Heat a non-stick frying pan and toast the radish, turmeric powder, chilli powder, green chilli and salt for about 2-3 minutes. Put aside.
3. Tear a chunk of dough, about the size of a tennis ball and wrap the dough around 1 tablespoon of the radish mix. Roll out the stuffed ball with a rolling pin until the dough is 1 cm thick. You can roll it out as a triangle, square or round flatbread.
4. On the heated non-stick frying pan, put a paratha on it. Put a few drops of ghee spread out on the top of the paratha. Flip occasionally until both sides are golden brown, about 3-5 minutes per paratha.

Can be served with curried dishes or eaten with a little bit of butter spread on top. Enjoy!

# அடுத்த இதழில்...... மேலும் புதிய ஆக்கங்கள்......

## ஐயப்ப காவியம்

கலாராஜன்-கனடா

சுவாமியே! சரணம் ஐயப்பா!

"ஐயப்ப காவியம்" முற்றம் இதழ் 2ல் ஆரம்பம்

தேவர்களின் வேண்டுதலுக்கு இணங்கி மகாவிஷ்ணு

மோகினி வடிவமெடுத்து அசுரர்களிடம் இருந்து பாற்கடல் அமுதை மீட்டு வந்து தேவர்களுக்கு பகிர்ந்தளிக்க வருவதை அறிந்த பரமசிவன் மோகினிரூபத்தில் இருக்கும் மகா விஷ்ணுவை பார்ப்பதற்காக வந்த வேளையில் மொகினி அழகில் மயங்கி மொகினி உருவில் இருந்த மகாவிஷ்ணுவை கட்டித்தழுவி கலந்ததால் ஹரிஹர புத்திரன் ஸ்ரீஜயப்பன் மண்ணில் ஜென்மம் எடுத்தார்.

பரமசிவனுக்கும் விஷ்ணுவுக்கும் மகனாக பிறப்பவன் பன்னிரண்டு வருடங்கள் பூலோகத்தில் வாழ்ந்த பின்னரே தன்னை வதம் செய்யலாம் என்று மகிஷி பிரமமாவை வேண்டி தவமிருந்து பெற்றிருந்தாள். அந்த வரத்தின் காரணத்தால் பிள்ளை இல்லா குறையில் பெரிதும் கவலையுற்றிருந்த கேரள நாட்டில் பந்தள தேசத்து அரசனும் அரசியும் சிவபக்தர்களாகிய அவர்கள் பம்பை நதிக்கரையில் குழந்தையாக கிடந்த ஷரிஷரிசுதன் ஸ்ரீஜயப்பனை கண்டு எடுத்தார்கள்

மணிகண்டன் என்ற பெயரோடு பன்னிரண்டு ஆண்டுகள் வளர்ந்த ஹரிஹர புத்திரன் ஒருநாள் வேட்டையாடத் தனியாக காட்டுக்கு சென்றபோது தேவேந்திரன்,மற்றும் தேவர்கள் முனிவர்கள் அவர் முன்தோன்றி மகிஷியிடம் இருந்து தம்மைக் காத்தருள வேண்டும் எனக் கேட்டுக்கோண்டனர்

உரிய வேளை வந்ததும் மகிஷியை வதம் செய்து புலோகத்தில் இருந்து ஹரிஹர புத்திரன் மறைந்தார்.

ஸ்ரீஜயப்பன் திருவருளால் ஸ்ரீஜயப்ப காவியம் எழுதும் பாக்கியம் கிடைத்தது என் பிறவிப் பயனை யான் பெற்றுவிட்ட மனத் திருப்தியை தருகிறது.

முற்றம் இதழ் இரண்டில் இருந்து ஜயப்ப காவியம் அரங்கேறும் என்பதை முற்ற வாசகருக்கு தெரிவிப்பதில் பெரு மகிழ்ச்சி அடைகிறோம்!

## மண் மனம்

ஆதவன்-டென்மார்க்

....... அக்கம் பக்கத்து ரேபிள்களில் எல்லாம் சிங்களவர்கள் தான் இருந்து கொண்டிருந்தார்கள். முன் இரண்டு ரேபிள்கள் மட்டுமே காலியாய் இருந்தன.

'பியதாச ரீ ரும்.....' என்ற போர்டிற் கிணங்க கல்லாப்பட்டியில் தடித்த மீசையும் அரையில் கறுப்பு 4'' பெல்ற்றுமணிந்த பியதாசாவின் தம்பி நாணயக்கார இருந்து கொண்டிருந்தான்.

உரத்த தமிழ்க் குரல் எங்கிருந்து வருகிறது என்ற நோக்குடன் பல சிங்களச் செவிகள் உலா வருகின்ற காலகட்டம் அது.

அதுவும் பியதாசவின் கடையைப் பற்றிச் சொல்ல வேண்டியதில்லை. தமிழ்ப் பொடியங்கள் பொதுவாகப் பியதாச கடைக்கு வருவதில்லை. சுரேசும் ரகுவும் மட்டும் விதிவிலக்கு. இவர்கள் பல காலமாக இங்கு ரீ குடிக்க வருபவர்கள். அத்துடன் இருவருக்கும் சரளமான சிங்களம் பேசவரும்.

பியதாசவிற்குத் தோள் பட்டையில் கையில்லாத பனியனுக்கூடாக இடது கையில் தெரியும் தழும்பு எழுபத்தேழு 'றையற்சில்' ஒரு தமிழ் மகன் வாளால் வெட்டியதென்றும்...... பியதாசவின கடையில் இப்பொழுதும் பாடிக்கொண்டிருக்கிற 'ஸ்ரீரியோ செற்' கொலன்னாவையிலிருந்த புங்குடுதீவுத் தர்மலிங்கத்தாற்றை என்பதும் ....... அடிக்கடி கொழும்பு வாழ் தமிழ்ப் பொடியங்களாலை கதைக்கப்படும் ஒரு விடயம்.

தம்பி நாணயக்காரவுக்கும் பியதாசவுக்கும் இடையில் நல்ல ஒற்றுமையுண்டு பலவிதத்தில். இருவருக்குமிடையில் ஆறுவித்தியாசங்கள் கண்டு பிடியுங்கள் என்றால் அங்குள்ள தமிழ்ப் பெடியங்கள் ஒரே ஒரு வித்தியாசந்தான் சொல்லுவார்கள். 'பியதாச கொஞ்சம் யோசிச்ச பிறகுதான்

தமிழர்களை வெட்டுவான்.'

'நாணயக்கார வெட்டிய பின்தான்

யோசிப்பான்.' ............

முற்றம் தொடர்புகளுக்கு:

+1-647-872-0796

muttram.news@gmail.com

www.muttram.ca



**பத்திரிகை வடிவமைப்பு:** MIG Publishing Solutions

## வடதுருவத்தில் தடமிடுந் தமிழர்

சி.உமாபாலன்-நோர்வே

நள்ளிரவுச்சூரியன் அள்ளித்தரும் அழகால், நனிபோற்றும் நானிலங்களும் தமக்குள் இணைந்து மாறிமாறிக் காட்சி தரும் நன்னிலத்தால், யாவரும்



கேளிரெனும் நம்பாட்டன் வழிசிந்திக்கும் மாண்புடை மாந்தரால், நம்மவர்மேல் நன்மதிப்புக் கொண்ட மக்களைத் தாங்கித் தரணியிடைத் தனிப்பெரும் மதிப்புக் கொண்டமைந்தது நோர்வே நாடு.

தமிழர்கள் தொகையானது ஏனைய ஐரோப்பிய நாடுகளுடன் ஒப்பிடும் போது மிக மிகச் சொற்பமாகச் சிறுத்திருக்கின்ற போதும்; சான்றோர்களால், கலைஞர்களால், இலக்கியவாதிகளால், புகழ் கொண்டு திகழ்கின்ற பெண்மணிகளால் பெருத்திருக்கின்ற பெருமை கொண்டது நோர்வே. சர்வதேச மட்டத்தில் அறியப்பட்ட அறிவியற்றுறையாளர்களுடன்; தமிழ்க்கலையிலக்கியத் துறைகளில் காத்திரமான பலபடைப்புக்களை நல்கித் தமக்கெனத் தனியிடத்தைப் பெற்றவர்கள் நிறையவே இங்குண்டு. அவர் பதித்து வரும் தடங்கள் பற்றிய ஒருபதிவினைத் தொடராக எழுதவது ஓர்ஆவணமாகவும், பிறநாடுகளில் வாழும் தமிழர்கள் அறிந்து கொள்ளக்கூடியதாகவும் அமைந்து இரட்டித்த பலன் தருமென நம்புகின்றோம். அவ்வகையில் 'வடதுருவத்தில் தடமிடுந் தமிழர்' விரைவில் தொடராகத் தொடங்கவுள்ளது.

## சிறுவர் பக்கம்....



## வாசிக்கத் தவறாதீர்கள்....

